# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"



திருப்புகலூர்—பிரமன்


மாலை 3] பிலவ, சித்திரை [மணி 8

மே 1961


ரதி


சென்னை அரசாங்க அறநிலையப்

பாதுகாப்புத் துறை வெளியீடு.

## பொருளடக்கம்





## வேண்டுகோள்

மூன்ருவது ஆண்டுக்குரிய 'திருக்கோயில்' சந்தா தொகை பத்து ரூபாயை இதுவரை அனுப்பாதவர்கள் உடனே பண அஞ்சல் மூலம் அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

—ஆசிரியர்.


# திருக்கோயில்

ஆண்டுக் கையொப்பம் : ரூபாய் பத்து.

அறநிலையப் பாதுகாப்பு ஆட்சி அலுவலகம்

நுங்கம்பாக்கம் ஹைரோடு,

சென்னை-6.



திரு. A. உத்தண்டராமன், I.A.S.,
அவர்கள்
ஓய்வுபெற்ற அறநிலையத்துறை
ஆணையர்.



திரு. M. S. சாரங்கபாணி முதலியார்,
B.A., B.L., அவர்கள்
புதிய அறநிலையத்துறை ஆணையர்.








மாலை 3] பிலவ சித்திரை - மே 1961 [மணி 8

# கோயில் உள்துறை வெளித்துறை அலுவலர் கவனிக்கவேண்டியவை

அண்மையில் அரசாங்கத்தார் ஆறு இன்ஸ்பெக்டர்கள் பதவிகளை அதிகமாக அனுமதித்திருப்பதுடன் அவைகளை மேற் பிரிவுப்பணிகளாகவும் உயர்த்தி யிருக் கிறார்கள். ஒவ்வொரு இன்ஸ்பெக்டரின் ஆட்சிப் பகுதியும் வெகுவாகக் குறைக்கப் பட்டிருக்கிறது. அதனால் அரசாங்கத்தின் நோக்கம் என்னவென்றால் இன்ஸ்பெக்டர் கள் தங்களுடைய ஆட்சி எல்லைக்குள் ளிருக்கும் சிறு நிலையங்களின் கணக்கு களைத் தணிக்கையும் செய்யவேண்டும் என்பதே. ஆகையால் இன்ஸ்பெக்டர்கள் இந்த வேலைக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். முன்னால் சாதாரணமான மதிப்பீட்டைக்கொண்டு விதிக்கப்பெற்ற தீர்வைகள் தணிக்கையின்போது உண்மை யான தீர்வை விதிக்கக் கூடிய வருவாயை விட மிகவும் குறைவானதாகத் தெரிந் தது. ஒவ்வொரு இன்ஸ்பெக்டர் ஆட்சிப் பகுதியிலுமுள்ள சிறு நிலையங்களின் பட் டியல் ஒன்றைத் தயாரித்து அனுப்பி அவர்களைத் தணிக்கை வேலையை விரை வில் முடிக்க வேண்டுமென்று உத்தரவிட வேண்டும். நிலையங்களின் எண்ணிக்கை, நிலைமை, தொலைவு இவைகளுக்கிணங்க ஒவ்வொரு மாதமும் எத்தனை நிலையங்களை ஒவ்வொரு இன்ஸ்பெக்டரும் தணிக்கை செய்ய வேண்டும் என்பதை உதவி ஆணை யர்கள் குறிக்கவேண்டும்; மேலும் அந்த இன்ஸ்பெக்டர்கள் செய்திருக்கும் வேலை களை மாதாந்தர அறிக்கைகளில் நுண்மை யாகச் சரி பார்க்க வேண்டும். சிறு நிலையங் களின் கணக்கு தணிக்கை செய்வதுடன் பின்வரும் வேலைகளும் முக்கியத்துவ வரி சைப்படி அவர்களுடைய தனி கவனத் துக்கு வரவேண்டும்.

**1. 29-ஆம் பிரிவின்படியான பதிவேடு களைத் தயாரித்தலும் இசைவு பெறுதலும், அப் படி இசைவு பெற்ற பதிவேடுகள் உள்ளவற்றில் ஆண்டு தணிக்கை அறிவிப்பு அனுப்புதலும்.**

29-ஆம் பிரிவின்படி பதிவேடுகள் இன்னும் தயாரிக்க வேண்டிய சிறுநிலை யங்களின் பட்டியல் ஒன்று தயாரிப்ப துடன், ஒவ்வொரு மாதத்திலும் அனுப்ப வேண்டியதையும் வரையறை செய்ய வேண்டும்.

**2. பங்கு, தணிக்கை கட்டணம் முதலியவை வசூலித்தல்—நிர்வாக அதிகாரிகளின் சம்பளம், செலவுப்படி முதலியவற்றை ஈடுசெய்தல்.**

பங்கு, தணிக்கை கட்டணம், மற்றும் ஆணையரின் கட்டளை நிதிக்குச் சரி செய்ய வேண்டிய வருவாய் இனங்களை வசூல் செய்வது இன்ஸ்பெக்டர் உள்பட இந்த துறையிலுள்ள ஒவ்வொரு அதிகாரியும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய வேலை. கோயிலைப் பார்வையிடும் ஒவ்வொரு

தடவையும் இந்த வேலையை முதலிலும் அவசியமாகவும் கவனிக்க வேண்டும். பார்வையிடப்பெறும் நிலையத்தின் பாக்கி விவரங்களையும், வசூல் விவரங்களையும், வசூல் செய்யாததற்குக் காரணங்களையும் தெரிவிக்கவேண்டும்.

1—1—1960க்குப் பிறகு நிர்வாக அதிகாரிகளின் சம்பளம், செலவுப்படி முதலிய வற்றை அரசாங்கம் கொடுத்து, பின்னர் சம்பந்தப்பட்ட கோயில்களிடமிருந்து வசூல் செய்யவேண்டும். நிர்வாக அதிகாரி, தொகையை விரைவாகவும், அடுத்தமாதம் சம்பளம் வாங்குவதற்குள்ளும் சரி செய்து முடிக்கிருரா என்பதை இன்ஸ்பெக்டர் ஒவ்வொரு தடவை போகும்போதும் சரி பார்க்கவேண்டும். முன் தொகைகள் ஏதாவது நிர்வாக அதிகாரி எடுத்திருக்கிருரா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படி முன் தொகைகள் எடுத்துக் கொள்ள அனுமதித்து உத்தரவுகள் இல்லையானல் அதை உதவி ஆணையரின் பார்வைக்கு உடனே கொண்டு போக வேண்டும். பணம் கொடுக்க வேண்டிய பயணப்படிப் பட்டியல்கள் மற்றபட்டியல்கள் நிர்வாக அதிகாரியிடமிருந்து வரவேண்டியிருந்தால் அவற்றின் விவரங்களையும் உதவி ஆணையருக்கு அனுப்ப வேண்டும். செலவுகள், மற்றும் கோயில் களிலிருந்து வரவேண்டியவைகளை உடனடியாக வசூல் செய்யவேண்டும்.

இந்தவகையில் செய்யப்பட்ட வேலையின் தன்மையும், அளவும் ஒவ்வொரு இன்ஸ்பெக்டரின் மதிப்பையும் தகுதியையும் தீர்மானிக்கும் அளவுகோலாகும். உதவிஆணையர்கள் இந்த வேலையைக் கூர்மையாகக் கண்காணிப்பதுடன், கடமையில் தவறுகிற கவனமற்ற இன்ஸ்பெக்டர்களின் பேரில் உடனடியாகத் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும்.

3. **இனம் அறிக்கைகள்.** அரசாங்கத்தால் தனிப்பணியாளர் நியமிக்கப்பெற்று, கலெக்டர் அலுவலங்களிலுள்ள இனம் சுத்தபதிவேடுகளிலிருந்து வடிப்புகளெடுக்கப்பட்டு உதவி ஆணையர்களின் நிலையங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பதிவேட்டினின்றும் சுருக்கங்கள் எடுத்து சம்பந்தப்பட்ட இன்ஸ்பெக்டர்களுக்கு அனுப்பி, நிலங்கள் எல்லாம் சம்பந்தப்பட்ட நிலையங்களின் சுவாதீனத்திலும் அனுபோகத்திலும் இருக்கின்றனவா என்று சரி பார்க்கவேண்டுமென்று அடிக்கடி உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வகை வேலையின் முன்னேற்றம் திருப்தியானதாக இல்லை. பல இடங்களில் இன்ஸ்பெக்டர்களின் ஆட்சியெல்லை பெரிதாக இருப்பது இதற்குக் காரணமாக இருக்கலாம். இப்போது ஆட்சிப்பகுதி குறைக்கப்பட்டிருப்பதால் இந்தவேலையை விரைவாகக் கவனிக்க வேண்டும். 29-ஆம் பிரிவுப்பதிவேடுகளுடன் ஒவ்வொரு மாதமும் இதைப்பற்றியும் கவனிக்க ஒரு திட்டம் வகுக்கவேண்டும். 29-ஆம் பிரிவுப்பதிவேடுகளில் எல்லா நிலங்களும் சரியாக எழுதப்பட்டிருக்கிறதா என்பதைப்பார்க்க நடவடிக்கை எடுக்கவேண்டும். நகைகள் விலையுயர்ந்த பொருள்கள் எழுதப்பட்டிருக்கும் பகுதியை நன்ருகத் தணிக்கை செய்யவேண்டும். நகைகள் முதலியவற்றின் மதிப்பு ரூ. 3000க்கு மேற்பட்டதாக இருந்தால் நகைத் தணிக்கை அலுவலர் அதைத் தணிக்கை செய்வதற்காக ஒரு தனி அறிக்கை அனுப்ப வேண்டும்.

4. **தருமகர்த்தர்கள் நியமனம்:** நிலையங்களுக்குத் தருமகர்த்தர்கள் இல்லையென்றும், சிலர் தங்கள் நியமனகாலத்துக்கு மேலும் உண்மையான தருமகர்த்தர்களாக நீடித்திருக்கிருர்கள் என்றும் தருமகர்த்தர்கள் நியமன ஏற்பாட்டில் முன்னேற்றமில்லையென்று அண்மையில் நடந்த பிராந்தியக் குழுத் தலைவர்கள் மாநாட்டில் அதிகமான குற்றச்சாட்டு இருந்தது. ஒவ்வொரு நிலையத்திற்கும் சட்டமுறைப்படி நியமிக்கப்பட்ட தருமகர்த்தர் இருக்கவேண்டும் என்பதைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. அத்தகைய நிலையங்களின் பட்டியல் இன்ஸ்பெக்டர்களுக்கு அனுப்பப் பெற்று தருமகர்த்தர் நியமனத்தைப்பற்றிய அறிக்கைகள் அனுப்புவதைக் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு இன்ஸ்பெக்டரும் தன் ஆட்சிப் பகுதியிலுள்ள நிலையங்களும், அவைகளின் தருமகர்த்தர்களின் பெயர்களும், அவர்களின் பதவிக்காலம் தொடங்

கிய தேதிகளும் அடங்கிய பட்டியல் ஒன்றை வைத்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட தருமகர்த்தர் பதவிக்காலம் முடிவடைந்தால் இன்ஸ்பெக்டர்கள் தாங்களே புது தருமகர்த்தர் நியமிக்கும் ஏற்பாட்டிற்கு ஆவன செய்ய வேண்டும். உதவி ஆணையரும் கவனமாக இருந்து உரியகாலத்தில் நடவடிக்கை எடுக்க வேண்டும். தருமகர்த்தர்கள் பதிவேட்டினின்றும் சுருக்கங்கள் அனுப்பும் வேலை விரைவாகக் கவனிக்கப்பட வேண்டும்.

உதவி ஆணையர்கள், பிராந்தியக் குழுவிற்கு இன்னும் தருமகர்த்தர்கள் நியமிக்கப்பட வேண்டிய நிலையங்களின் பட்டியலை முன்னாலேயே கொடுத்திருப்பார்கள் என்று நம்பப்படுகிறது. அந்த நிலையங்களுக்குத் தகுதியான யோக்கியாதம்சமுடைய தருமகர்த்தர்களைக் கூடிய விரைவில் நியமிக்க வேண்டுமென்று பிராந்தியக் குழு அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

5. **கல்வெட்டுக்களையும் சிற்பங்களையும் பாதுகாத்தல்.** காலஞ்சென்ற புலாபாய் தேசாய் அவர்களின் மருமகள் திருமதி மாதுரி திரஜ்லால்தேசாய் அவர்கள் பழமையும் வரலாற்றுச் சம்பந்தமுமுடைய பல தென்னாட்டுக் கோயில்களைப் பார்வையிட்டு அவைகளிலுள்ள சிற்பங்கள், வெண்கல முதலிய உலோகங்களாற் செய்யப்பெற்ற உற்சவ உருவங்கள் நல்லமுறையில் பாதுகாக்கப்படவில்லையென்று கூறுகிறார்கள். அப்படிப்பட்ட விக்கிரகங்களை எந்த முறையில் பாதுகாக்கப்பட வேண்டுமென்று அந்த அம்மையார் குறிப்பு ஒன்று எழுதி யனுப்புமாறு கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றார்கள். இதைப் பற்றிஅரும்பொருட்காட்சிச்சாலை அதிகாரிகளையும் கேட்கப்பட்டிருக்கிறது. விக்கிரகங்களைப் பாதுகாக்கும் முறையைப்பற்றி தனியே ஒரு சுற்றறிக்கை அனுப்பப்படும். முக்கியமான விக்கிரகங்கள், அதுவும் நாட்டுப்புறங்கள் பக்கமுள்ளவற்றை, புகைப்படங்கள் எடுத்து நகைகள் முதலிய விலையுயர்ந்த பொருள்களுடன் வைத்திருக்க வேண்டும். அப்படிச் செய்வதால் அனுமதியின்றி மாற்றுவிக்கிரகங்களை வைத்தாலும், அல்லது விக்கிரகங்கள் அப்புறப்படுத்தப் பெற்றாலும் எளிதில் தெரிந்து, கண்டு பிடிக்க முடியும். விக்கிரகங்கள், தொன்மை வரலாற்றுச் சம்பந்தமுடைய பொருள்கள் இவற்றைப் பாதுகாக்கும் பொருட்டு உதவி ஆணையர்கள் இவ்வகைப் பணியில் முன்னேற்றத்தைக் கேட்டு ஒரு அறிக்கை வாங்குவதுடன் இந்த வேலை விரைவில் முடிவதற்கு ஆவன செய்ய வேண்டும். கையெழுத்திட்ட புகைப்படப் பிரதிகள் ஆணையருக்கு அனுப்பவேண்டும். பல கோயில்களில் சுவர்களிலும், தரைகளிலுமுள்ள கல்வெட்டுக்கள், கல்வெட்டுத் துறையினரால் படியெடுக்கப்படாமலிருக்கின்றன. அறநிலையத்துறையில் கல்வெட்டு அலுவலர் ஒருவரை நியமிக்க ஏற்பாடாகி வருகிறது. அவர் ஒரே ஒருவர் தான் இருப்பாராதலால் தமிழ்நாடு முழுவதும் சென்று விரைவில் வேலை முடிக்க இயலாது. கல்வெட்டுக்கள் சிதைக்கப்படாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டியது இன்ஸ்பெக்டர்களின் தலையாய கடமையாகும். முடியுமானால் அவைகளுக்குப் பிரதியெடுத்துப் பாதுகாக்கவும் முயற்சி செய்யலாம். குறிப்பிட்ட இடம் ஏதேனும் ஒன்றில் கல்வெட்டு அறிஞரின் உதவி தேவையானால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலுள்ள வித்துவான் திரு. சுந்தரேசவாண்டையார் அவர்களைக் கேட்கலாம். அவருக்குப் போக்குவரவுக்குப் பயணச் செலவும் ஒரு சிறு ஊதியத் தொகையும் கொடுத்து அவர் உதவியைப் பெறலாம். பின்னால் எதுவும் தொல்லைவராமலிருப்பதற்காக அவருக்குக் கொடுக்க வேண்டிய தொகையைப்பற்றி தேவஸ்தானத்தாரின் இசைவை முன்கூட்டியே பெறவேண்டும்.

திருப்பணி நடந்தால் கல்வெட்டுக்கள், சிற்பங்கள் உள்ள கற்களை இருந்த இடம்விட்டு மாற்றக்கூடாது. அவைகளுக்கு எண்கள் இட்டு, கல்வெட்டுக்கள் முறை மாறாமல் இருக்க, பழைய இடங்களிலேயே திருப்பி அமைக்க வேண்டும். செடிகொடிகளை அகற்றும்போது கல்வெட்டுக்கள், சிற்பங்கள் இவைகள் இடம் குலையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். தங்களால் வேலை செய்ய முடியாதபோது அருகிலுள்ள தொல்பொருள்

ஆராய்ச்சித்துறை அதிகாரியைக் கலந்து செய்ய வேண்டும்.

திரும்பத் திரும்ப அறிக்கைகள் அனுப்பியிருந்த போதிலும், கல்வெட்டு, சிற்பம் இவை முக்கியத்துவம் வாய்ந்த கற்களிலும் தூண்களிலும் வெள்ளையடித்தும், வண்ணம் பூசப்பெற்றும் இருப்பது காணப்படுகிறது. முன்னாலேயே அப்படி வெள்ளையடிக்கப்பட்டும், வண்ணம் தீட்டப்பெற்றும் இருந்தால் அவற்றை உடனடியாக கழுவிச் சுத்தம் செய்து பாதுகாக்கவேண்டும். இத்துறையிலும் இன்ஸ்பெக்டர்கள் தனிக் கவனம் செலுத்த வேண்டும். திருப்பணி என்ற பெயரால் பல கல்வெட்டுக்களும் சிற்பங்களும் பாழ் செய்யப்பட்டிருக்கின்றன. துணை ஆணையர்கள், உதவி ஆணையர்கள் தங்கள் பயணத்தில் இந்த வேலையைக் கண்காணிப்பதுடன் வரலாற்றுச் சம்பந்தப்பட்ட முக்கிய சிற்பங்கள், கல்வெட்டுக்கள் இவைகளுக்கு எவ்விதமான சிதைவும் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ளவேண்டும். அவைகள் மிகவும் கவனமாகப் பாதுகாக்கப்படவேண்டும்.

சில கோயில்களின் விமானங்கள் தனிச்சிறப்பு வாய்ந்த தன்மைகள் உடையன. அவைகளை எக்காரணத்தை முன்னிட்டேனும் மாற்றக்கூடாது. பழமையாகவுள்ள தன்மைகளைக் கவனமாகப் பாதுகாக்க வேண்டும்.

6. **அர்ச்சகர்களும், மற்றகோயில் அலுவலர்களும்.** கிராமங்களிலுள்ள சிறுகோயில்களின் அர்ச்சகர்கள், அலுவலர்கள் இவர்களின் வேலைத்தரத்தை உயர்த்துவதற்காக, பள்ளி முன்னேற்றத் திட்டம் போன்று கோயில் முன்னேற்றத் திட்டம் தொடங்க அரசாங்கம் அண்மையில் ஆலோசனைக்குக்கொண்டு வந்திருக்கிறது. அவர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த எல்லா வழிகளையும் ஆராய்ந்து நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். ஒரு வழி முன்னாலேயே சில கோயில்களில் செயலுக்குக் கொண்டுவரப் பெற்றிருக்கிறது. அதாவது, தெய்வப் பாடல்கள் பாடுவதற்காக அர்ச்சகருக்கு ஒரு சிறு தொகை அதிகமாகக் கொடுக்கப்படுகிறது. நாட்பூசைக்கும் விழாக்களுக்கும் உபயதார்களைச் சேர்ப்பதற்கும் நடவடிக்கையெடுக்கவேண்டும். அதனால் படித்தரம் முதலிய செலவினங்கள் குறைவதுடன் அதனால்வரும் மிகுதியை அர்ச்சகர்கள். கோயில் அலுவலர்கள் இவர்களின் தொழில் தரத்தை உயர்த்தவும் பயன் படுத்திக் கொள்ளவும் முடியும்.

[சுற்றறிக்கை எண் 11310-61-ஏ-5, தேதி, 27-3-1961.]

---

**சென்னை** :—*அருணாசலேசுவரர் கோயிலில் வசந்த உற்சவம் 19-4-61 முதல் 29-4-61 வரையிலும், வரதப்பெருமாள் கோயிலில் வசந்த உற்சவம் 30-4-61 முதல் 2-5-61 வரையிலும் நடைபெற்றன.*

**சென்னை** :—*சென்னமல்லீசுவரர் கோயிலில் திருநடன உற்சவம் 13-4-61ல் நடைபெற்றது.*

**பெண்ணாகடம்** :—*பிரளயகாலேசுவரர் கோயிலில் பிரம்மோற்சவம் 20-4-61 முதல் 30-4-61 வரை நடைபெற்றது.*

**சென்னை** :—*முல்லா சாயபு தெரு - அரங்கநாதசுவாமி கோயிலில் உள்ள பாஷ்யக்காரசுவாமிக்கு சைத்ரோற்சவம் 12-4-61 முதல் 22-4-61 வரை நடைபெற்றது.*

**புதுப்பாளையம்**:—*மாரியம்மன் கோயிலில் உற்சவம் 40—4—61 முதல் 30—4—61 வரை நடைபெற்றது.*

**நாகப்பட்டினம்** :—*சட்டைநாதசுவாமிகோயிலில் பிரம்கோற்சவம் 20—4—61 முதல் 10—5—61 வரை நடைபெறும்.*

# சிவஞான போதம்

[திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T,]

(முன் இதழ் தொடர்ச்சி)

முதற்சூத்திரம்:-இரண்டாம்அதிகரணம் :

சூத்திரப்பகுதி: "தோற்றிய திதியே ஒடுங்கி (மலத்து) உளதாம்" என்பது.

வார்த்திகம் ' இனி, இல்லதற்குத் தோற்றம் இன்மையின், உள்ளதற்குச் செய்வோ ரின்றிச் செய்வினை இன்மையின், ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தி இல்லை என்றது' எனவரும்.

இதன் பொருள்:—முயற்கோடு, ஆகா யத் தாமரை என்றாற் போல்வன இல் பொருள் எனப்படும். அவற்றுக்குத் தோற் றம் என்பது எஞ்ஞான்றும் இல்லை. உடம்பு, கருவிகள், நுகர்ச்சிப் பொருள், நிலன் என வழங்கப்பட்டு, மாசறு காட்சிக்குப் புலப்படு தலின், உலகம் உள்பொருள் எனப்படும். மேலும் உள்பொருள்கள் தம்தம் முதற் காரணத்தில் இருந்து தோன்றுங்கால், தம் மைத் தோற்றுவிக்கும் ஒரு வினை முதலின் விருப்பத்தின் வழியே தோன்றும். ஆதலின், உலகமும் அவ்வாறு ஒருவினை முதலை உடை யதே ஆகும். எது எங்கு ஒடுங்கிற்றோ அதற்கு அங்கிருந்துதான் தோற்றம்—என் னும் நியாயத்தால் உலகும்தான் முன் ஒடுங்குதற்கு நிலைக்களனாக இருந்த மாசங் காரக் கடவுளாகிய பரமசிவனிடத்திலிருந்து அவன்றன் நினைவாற்றலால்தான் தோன்றும். [முன் ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுதற் குக் காரணம் உயிர்களை அநாதியே பற்றி யுள்ள, இயற்கை மலம் (Precosmic impurity) எனப்படும் ஆணவ மலமே ஆகும்] என்றபடி.

1. இனி, இவ்வதிகரணத்தில் கூறப் படும் முடிவுகள் (Conclusions) மூன்று. அவை யாவன:—

(i) காணப்படும் உலகம் உள் பொருளே (Real entity):

(ii) இது தோன்றுங்கால் தன் வயத் தால் அன்றித் தன்னைத் தொழிற்படுத்தும் ஒரு முதல்வன் வயப்பட்டே தோன்றியதா தல் வேண்டும்;

(iii) அம்முதல்வன் முற்றழிப்புக் கடவுள் எனப்படும் பரமசிவனே ஆவன்— என்பவை.

2. இதன்கண் ஐயப்பாடு:—

உலகம் முதற்காரணத்திலிருந்து வெளிப்பட்டுத் தோன்றும் உள்பொருளோ. அன்றிப் புதிதுபுதிதாகத் தோன்றும் இல் பொருளோ? உள்பொருள் எனத் துணியப் படினும், அது தனக்கு முதலாவதொன்றனை உடைத்தோ அன்றோ? அஃது உள்பொரு ளாய். ஒரு முதல்வனால் தொழிற்படுவது என முடிக்கப்படினும், அம்முதல்வன் பரம சிவன்றானோ, அன்றி அயன், மால், குண ருத்திரன் என்பாருள் ஒருவனோ?—என நிகழ்வது.

3. இங்குப் பிறர் கூறும் பக்கம்:—

(i) விதையைச் சார்பாகக்கொண்டு மரந்தோன்றும்; தோன்றியபின் விதை அழி யும்; மரமும் காய், கனி, விதை முதலியவற் றைத் தோற்றித்தான் அழியும். தாய் தந்தை யரைச் சார்ந்து மகவு தோன்றும்; தோன்றிய பின் தாய்தந்தையர் அழிவர். மகவும் வளர் ந்து, மணந்து தன் வழி மக்கள் தோன்றுதற் குச் சார்பாய் நின்று, பின் அழியும். இங் ஙனம், முன் இல்லாத பொருள் தனக்கு உரியதொரு சார்பில் தோன்றிப்பின் அழித லின், இத்தகைய பொருள்களின் கூட் டத்தை இல்பொருள் என்றலும், அவை தோன்றுதற்கு அவ்வவற்றின் சார்பே கார ணமாதலின், ஒரு முதல்வனை உடையவை அல்ல என்றே கொள்ளுதலும் பொருத்தம் ஆம் என்பர் புத்தர்.

## மறுப்பு

நெல்லினின்றும் நெல்தோன்றுமே யன்றிக் கரும்பு தோன்றாது. எண்ணெயை எள்ளினின்றும் பெறலாமேயன்றி மணலினின்றும் பெறுதல் கூடாது. பறவையினின்றும் பறவையும், விலங்கிலிருந்து விலங்கும், மக்களிடத்து மக்களுமே தோன்றுதலைக் காண்கின்றோம். இதனால் காரியப் பொருள் எல்லாம் தாம் தோன்றுதற்கு உரிய முதற்காரணம் ஒன்றை இன்றியாமையாது உடையனவே என்பது தெளியப்படும். மேலும், முதற்காரணத்திற்கும் அதிலிருந்து தோன்றுதற்கு உரிய காரியத்திற்கும் ஒரு பிணைப்பு உள்ளது என்பதும் அறியப்படுகின்றது. இல்லையெனின், முயலின் சென்னியில் கோடு என்றும் தோன்றாது எனவும், ஆவின்சென்னியில் அது தோன்றி வளரும் எனவும் நாம் பொதுப்படுத்தி உணர்தலும், வழங்குதலும் இல்லையாய் ஒழியும். பண்டும் இன்றும் என்றும் நாம் கற்கும் கலையனைத்தும் காரியத்திற்குக் காரணத்தோடு உள்ள பிணைப்பை ஆய்ந்துணரும் நோக்கும் போக்குமே உடையன. ஆகலின், உலகம் உள்பொருளேயாம். இந்த அரிய உண்மையைத் தொல்லாசிரியர் உணர்ந்து, "காரணம் என்பது பொருள்களின் புலப்படாத, கலங்கிய அருநிலை; காரியம் அவற்றின் புலப்படும், துலங்கிய உருநிலை" எனத் துணிந்தனர். வேறு வகையாகக் கூறின், பொருள்களெல்லாம் புலப்படாத அருநிலை, புலப்படும் உருநிலை என்னும் இருநிலைகளை உடையன. அருநிலையே காரணநிலை எனப்படும்; உருநிலை காரியம் எனப்படும். சத்திருபம் காரணம்; வியக்திருபம் காரியம் எனக் கூறலாம். இவ்வாறு ஒரு காரியம்தான் புலப்பட்டுத் தோன்றுதற்கு முன்னும் காரண நிலையில் அருவமாக உள்ளது என்று முடிவுகட்டும் ஆய்வுரைக்குச் சற்காரியவாதம் என்பது பெயர். சத் - உள்ளது, காரியம் - ஆக்கப்படுவது. வாதம்—பேச்சு. காரியம்தான் உருநிலையில் விளங்குதற்கு முன் காரணநிலையில் அருவமாக உள்ளது என நிறுவும் பேச்சு சற்காரியவாதம் எனப்படும். இது சாங்கிய மதத்தில் உருப்படியாக முதற்கண் திரட்டிக் கொடுக்கப்பட்டது. சுவேதாசுவதரம் முதலிய உபநிடதங்களும், தொல்காப்பியம், திருக்குறள் முதலிய செந்தமிழ் முதனூல்களும், சைவத் திருமுறைகளும், பகவத்கீதையும் சைவசித்தாந்த சாத்திரங்களும் சற்காரியக் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு எழுந்தவை என்பது உணரத்தக்கது.

சூத்திரத்தில் நிதியே எனவும், வார்த்திகத்துள் 'இல்லதற்குத் தோற்றமின்மையின், உள்ளதற்கு' எனவும் ஓதியது சற்காரியம் நிறுவுதற்கே ஆம்.

சிவப்பிரகாசத்துள் சைவசித்தாந்த நெறியைத் "தாவில் சற்காரியத்தாய்" (செய். ௬௬) எனச் சிறப்பித்தது நினைக்கத் தக்கது.

சற்காரியவாதத்தின் தெளிவு மேலே கொடுக்கப்பட்டது; விரிவு திராவிடமாபாடியத்துட் காண்க.

(ii) உலகம் முத்தொழிற்படும் என்பது பொருந்தும்; அது நுண்ணிலை பருநிலை என்னும் இருநிலைகளில் பலவேறு வகைப்படப் புலப்பட்டும் புலப்படாதும் நிற்கும் ஆதலின், அதனை உள்பொருள் என்றலும் பொருந்தும். ஆயினும், அதனைத் தோற்றுவிப்பான் ஒருவன் வேண்டா; காரியங்களெல்லாம் தம்தம் முதற்காரணத்திலிருந்து தாமே தோன்றும்—என்பர் சாங்கியர்.

மறுப்பு: காரியங்கள் எல்லாம் மூன்று காரணங்களை உடையன. அவை முதற் காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் என்பவை. ஒரு பெரிய அணையைக் கட்டி முடிக்க வேண்டின், அதற்கு முதற்கண் சல்லி, செமண்டு, இரும்பு முதலியவை வேண்டும். இப்பொருள்களே அணையாக உருப்பட வேண்டும். ஆதலால் இவை முதற் காரணம் எனப்படும். இவைதாமே அணையாக உருப்பட்டுவிடமாட்டா. இவற்றைத் திட்டப்படி அணையாக அமைக்க ஒரு தலைமை பொறியர் (Chief Engineer) இருப்பர். அவர் கீழ்ப்பல உதவிப் பொறியர்களும், வேலையாட்களும் இருந்து, அவர் ஆணையின்வழி நின்று தொழில்புரிவர். இங்ஙனம் அறிவு ஆற்றல், செயலாற்றல் உடையராய்ப் பொருளைத் தோற்றுவிப்போர் அனைவரும் வினைமுதல் (கருத்தர்கள்) எனப்படுவர். இவருள் தலைமைப் பொறியர் எல்லா முதன்மையும் உள்ளவராய்ப் பிறரை ஏவுதலின், ஏவுவினை முதல் எனப்படுவர்; பிறர் அனைவரும் அவர் வழிநின்று தொழிலியற்றும் அற்ப முதன்மை

யுடையவர் ஆகலின், **இயற்று வினைமுதல்** எனப்படுவர். இயற்றுவினை முதல்கள் அவர் அவர் அறிவுத்திறன், செயல்திறன், முன் முன் செய்துள்ள பணிமுதலிய தகுதிகளுக்கு ஏற்றபடி பல நிலைகளில் அமர்த்தப்பட்டுக் கருவிகள் பலகொண்டு தொழிலியற்றுவர். இவர் தம் தகுதிகளும், கைக்கொள்ளும் கருவிகளும் துணைக்காரணம் எனப்படும். இந்த ஒழுங்கைவிட்டு உலகில் எந்த நிகழ்ச்சியும் உண்டாவதில்லை. இவ்வாறே, உலகிற்கும் காரணங்கள் தேர்ந்து ஆய்ந்து கொள்ளப் படும்.

சாங்கிய நூலும் பிற தரிசனங்களும் உலகின் முதற்காரணத்தை மூலப்பிரகிருதி எனக்கூறும்; சிவநெறி, இதனினும் அதிநுட்ப நிலையில் பொருள்களின் இருப்பு உள்ளதென்று யோகக் காட்சியில் பெறப்படுதலின், அந்த அதிநுட்ப, வியாபக சடசத்திருப நிலையை **மாயை** எனக் கூறும். மா-ஒடுங்குதல், யா-வருதல். எல்லாம் எங்கு ஒடுங்கி எங்கிருந்து வருமோ அம்மூலப் பொருள் **மாயா** எனப்படும்; தமிழில் அது மாயை எனப்படும்.

உலகின் ஏவு **வினைமுதல்** மாசங்காரக் கடவுள் எனப்படும் பரமசிவன்; திருமால், பிரமன், இந்திரன், தேவர், மக்கள் முதலிய உயிர் வர்க்கங்களெல்லாம் **இயற்று வினைமுதல்.** பரமசிவனது **சங்கற்ப சத்தியும்**, அதன் வழிப்பட்டுச் செயற்படும் உயிர்களின் வினையும் துணைக்காரணம். ஏவு வினைமுதல் தான் விரும்பின் தானே இயற்றவும் கூடும் என்பது குறிக்கத்தக்கது.

இக்காலத்துக்கு ஏற்ப உலக அமைப்பிற்கு அணை எடுத்துக்காட்டாகக் கொள்ளப் பட்டது. நூல்களுள் குடத்தைக் காரியம் எனக்காட்டி, மண்முதற்காரணம், குயவன் வினைமுதல், தண்டு, சக்கரம் முதலியவை துணைக்காரணம் எனக்கூறப்படும்.

இதுகாறும் இவ்வதிகரணத்துட் பிறர் பக்கம் மறுத்துரைத்த சித்தாந்தத் துணிபுகளைப் பின்வரும் சிவஞான சித்திச் செய்யுட்களால் உளங்கொள்ளுதல் எளிது:—

(அ) **சற்காரியவாதம்**

"கருதுகா ரணம்உண் டாகக்
காரியம் உள்ளதாகி
வருதலால் அநாதி வையம்;
மற்றொரு கடவுள் இத்தைத்
தருதலால் ஆதியாகச்
சாற்றலும் ஆகும்."

(ஆ) **சாங்கியமத மறுப்பு**

புத்திமற் காரி யத்தால்
பூதாதி, புருடன் தானும்
அத்தனு கரணம் பெற்றால்
அறிதலால், அவற்றை மாயை
உய்த்திடும் அதனால், மாயைக்(கு)
உணர்வொன்றும் இல்லை என்றே
வைத்திடும் அதனால் எல்லாம்
வருவிப்பான் ஒருவன் வேண்டும்

[குடம் குயவனால் செய்யப்படும் காரியம் ஆனாற்போல, பூதமுதலிய பிரபஞ்சம் எல்லாம் ஓர் அறிவுடைப் பொருளால் (புத்திமத்) செய்யப்படும் காரியமே; புருடன் எனப்படும் உயிர் அறிவுடைப்பொருளே ஆயினும், அது பிரபஞ்சக்கூறாகிய உடம்பு முதலிய கருவிகளைப் பெற்றாலன்றி அறியமாட்டாது; மாயை பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாதலின் அஃது அறிவுடைப் பொருளாகமாட்டாது: இங்ஙனமாதலின், இவை அனைத்தினும் வேறாய், மாயையினின்றும் ஐம்பூத முதலிய உலகனைத்தையும் தோற்றுவிக்கும் ஒரு கடவுள் வேண்டப் படும்—என்பது பொருள்.]

காரிய கார ணங்கள்
முதல்துணை நிமித்தம் கண்டாம்;
பாரில் மண் திரிகை பண்ணு
மவன்முதல் துணைநி மித்தம்;
தேரின்மண் மாயை யாகத்
திரிகைதன் சத்தியாக
ஆரியன் குலால னய்நின்(று)
ஆக்குவன் அகிலம் எல்லாம்

(iii) இனி, பாஞ்சராத்திரிகள் பின்வருமாறு கூறுவர்:—

உலகம் முதற்காரணத்தோடு இயைபுடைத்தாய்த் தோன்றி அதன்கண் ஒடுங்கும் என்பதே பொருத்தம் உடைத்து. உலகிற்கு முதற்காரணம் மூலப்பகுதி; மூலப்பகுதி வடிவினனே வாசுதேவன். ஆகலின், உலகு வாசுதேவனிடத்துத் தோன்றி விரிந்து அவனிடத்தே ஒடுங்கும் எனக் கொள்ள வேண்டும்; பரமசிவனை உலகத்திற்கு நிமித்த காரணன் என்பது அன்றி முதற்காரணன் என்றல் வழக்கன்மையின், பரமசிவனை உலக முதல்வன் என்றல் பொருந்தாது. மறுப்பு:—

அறிவுடைப் பொருளாகிய வாசுதேவனை அறிவில் பொருளாகிய மூலப்பிரகிருதி என்றல் பொருந்தாது. பொருந்தும் எனக் கொள்வார் உளராயினும், சுவேதாசுவதரம் முதலியவற்றில் மூலப்பிரகிருதிக்கு மேலே தத்துவ புவனங்கள் கூறப்படுதலின், எல்லா வுலகும் ஒருங்கே தோன்றவும் ஒடுங்கவும் காரணமாதல் வாசுதேவனுக்குச் செல்லாது. மூலப்பிரகிருதியைத் தூலப்பிரகிருதி எனவும், அதற்கு மேம்பட்ட, அதனினும் நுண்ணிய பரம முதற்காரணத்தை **மாயை** என்றலும் ஞானநூல் மரபு. அம் மாயையைத் தனது சிற்சத்தி வியாபகத்தில் அடங்கக் கொண்டு வியாபித்து, மூலப்பகுதி, திருமால், பிரமன் முதலிய எல்லாரையும் எல்லாவற்றையும் தோற்றி ஒடுக்குபவன் பரமசிவன் என்பதே அறிவு நூல்களின் துணிபாம்.

இங்குச் சுவேதாச்சுவரம் நான்காம் அத்தியாயத்துள்ள 10, 11, 12-ஆம் மந்திரங்கள் மொழிபெயர்த்துத் தரப்படுகின்றன:—

"மாயையை முதற்காரணம் என அறிக; மாயையை உடையவனை மகேசன் என அறி. இந்த எல்லா உலகும் அவன்றன் அவயவங்கள் எனப்படும் சத்தி பேதங்களால் வியாபிக்கப்பட்டு உள்ளன"—மந். 10.

"எவர் ஒருவராய் முதற்காரணம் அனைத்தையும் அதிட்டிப்பாரோ, யாரிடத்து இவை அனைத்தும் ஒடுங்கியும் பல்வகைப் படத் தோன்றி விரிந்தும் நிற்குமோ அவரை ஈசானர் (உலக முதல்வர்) எனவும், வேண்டிய வரங்களைத் தருபவர் எனவும், பொருள் சேர் புகழுக்கு உரியர் எனவும், இயற்கை ஒளியுடையார் எனவும் உணர்ந்து வழிபடுவோன் வரம்பில் இன்பம் பெறுவான்"—மந். 11.

"எவர் கடவுளர் அனைவரையும் படைத்துக் காப்பவரோ, எவர் உலகைக் கடந்தவராய் (விச்சுவாதிகன்) ருத்திரராய்ப் பெருமுனிவராய், ஹிரண்ய கர்ப்பனது தோற்றத்தைக் கண்டவரோ, அவர் நமக்கு நல்ல உணர்வை நல்குக!"—மந். 12.

இதனால், பரமசிவனே எல்லா ஞானமும், எல்லா முதன்மையும், எல்லா அருளும் உடைய உலக முதல்வன் ஆவன் என்பது துணியப்படும்.

(தொடரும்)

---

**மதுரை**:—மீனாட்சிசுந்தரேசுவரர் கோயிலில் சித்திரைப் பெருவிழா 17—4—61முதல் 29—4—61 வரை நடைபெற்றது.

**திருத்தணிகை**;—சுப்பிரமணிய சுவாமிக்கு சித்திரை பிரம்மோற்சவம் 20—4—61 முதல் 30—4—61 வரை சிறப்பாக நடைபெற்றது.

**எட்டிகுடி**;—சுப்பிரமணியசுவாமி கோயிலில் சித்திரா பருவ உற்சவம் 21—4—61 முதல் 28—4—61 வரை நடைபெற்றது.

**திருசிராமலை**:—தாயுமானேசுவரர் கோயிலில் சித்திரைத்தேர் பெருந்திருவிழா 20—4—61 முதல் 4—5—61ரை நடைபெறும்.

**சென்னை—திருவல்லிக்கேணி**;—பார்த்தசாரதிசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 27—4—61 முதல் 8—5— 61 வரை நடைபெறும்.

**இராமநாதபுரம்—திருவுத்தரகோசமங்கை**—மங்களநாதசுவாமி கோயிலில் சைத்ரோற்சவம் 20—4—61 முதல் 30—4—61வரை நடைபெற்றது.

**இராமநாதபுரம்—திருப்புல்லாணி**—பட்டாபிராமசுவாமி கோயிலில் சைத்ரோற்சவம் 21—4—61 முதல் 1—5—61 வரை நடைபெற்றது.

**மாயூரம்**:—மாயூரநாதசுவாமி கோயிலில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 21—4—61 தொடங்கி 28—4—61ல்முடிவுற்றது,

# விழுமிய விமானம்

[திரு. ரா. சண்முகசுந்தரஞ்செட்டியார், திருவதிகை]

இம்மண்ணுலகம் சிவபெருமானை வழிபடுவதற்குச் சிறப்பாயது. புவனியிற்போய்ப் பிறவாமையை நினைந்து வருந்தினர் தேவர் என்பர் மணிவாசகனார். மற்றும், அவர் இறைவனை "வான்பழித்து இம்மண்புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல் (திருவாசகம். குயிற்பத்து-ச) என்று போற்றுவர். "வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்றனை அருச்சிப்பர்" (சூத்திரம் 2—செய்யுள்-கூஉ) எனச் சிவஞானசித்தியார் மண்ணுலகத்தின் பெருமையை அறுதியிட்டுரைக்கின்றது. அங்ஙனமாக இறைவனை வழிபடுதற்கு அமைத்த திருக்கோயில்கள் இமயமுதல் தென்னிந்தியக் கடலிலுள்ள தீவுகள் வரை பல காணப்படுவன. அவற்றுள் கடலோரத்திலுள்ளன சில; ஆற்றங்கரையினில் சில; வயல் வெளிகளில் சில; சோலைகளில் சில; காடுகளில் சில; பாலைவனங்களுள் சில; மலைகளினுச்சியில் சில. இத்திருக்கோயில்களைக் காதலால் தேவர்கள் கண்டனர்; அசுரர்கள் ஆர்வத்தால் எடுத்தனர்; முனிவர்கள் கட்ட முயன்றனர்; அரசர்கள் தங்களாணையால் அன்போடு கட்டுவித்தனர். அவைகளுள் நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கத்தைத் தாபித்து ஏத்தி வழிபட்டனர். இவ்வாறமைந்த திருக்கோயில்களுள் சிறந்தது திருவாரூர் என்பர் திருநாவுக்கரசு தேவர். அச்சிறப்பை இறைவன் உணர்ந்து ஆங்குத் திருக்கோயில் கொண்டமையை,

தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் ஏறேறிப்
பாங்கான ஊர்க்கெல்லாஞ் செல்லும் பரமனார்
தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்
பூங்கோயிலுள் மகிழ்ந்து போகா திருந்தாரே.

(திருவாரூர். பண்-சீகாமரம்-ரு) எனவரும் திருப்பாட்டினுரைத்தது அறியத்தக்கதாம். இன்னுஞ் சில தலங்களில் அன்பர்கள் பேரன்பிற்கு இரங்கித் தான்றோன்றியாகிய சுயம்புமூர்த்தியாக இறைவன் வெளிப்பட்டுள்ளனர் என்பது வரலாறு. திருவாக்கூர்த் தான்றோன்றி மாடம், கன்றாப்பூர் முதலியன சிறந்த எடுத்துக் காட்டாக அமைத்த திருக்கோயில்களாம். இத்துணைச் சிறப்புவாய்ந்த திருக்கோயில்களினும் மேலான திருக்கோயிலுண்டு என்பதனை விளக்குவது ஈண்டு அமைந்ததலைப்பாகிய "விழுமிய விமானம்" என்னும் அருந்தொடர். இது கருவூர்த் தேவர் திருமுகத்தலை என்னும் சிவத்தலத்தில் அருளிய திருவிசைப்பாவிலுள்ளது. அது,

புனல்படவுருகி மண்டழல் வெதும்பிப்
　　பூம்புனல் பொதிந்துயி ரளிக்கும்
வினைபடு நிறைபோனிறைந்த வேதகத்தென்
　　மனநெக மகிழ்ந்தபே ரொளியே
முனைபடு மதின்மூன் றெரித்த நாயகனே
　　முகத்தலை யகத்தமர்ந் தடியேன்
வினைபடுமுடனீ புகுந்துநின் றமையால்
　　விழுமிய விமானமா யினதே

(திருவிசைப்பா—117)

எனவரும். நீர்பட்ட மாத்திரத்தே நெகிழ்ந்து கரைந்து பயன்படாது, தீயினில் வைத்துச் சுடுபட்ட பின்னர் நீரைத்தாங்கி நின்று உயிர்களுக்கு நீர்தந்து காப்பாற்றும் மண்ணாலாகிய நீர்ச்சால்போல உலக நிலைமாறி சிவநிலை பெற்ற ஞான்று எனது மனம் அன்பால் நெகிழ்ந்துருக அதனை விரும்பிய பேரறிவுப் பிழம்பானவனே! எதிர்த்துவந்த மூன்று புரங்களையும் புன்முறுவலால் எரித்த தலைவனே! திருமுகத்தலை என்னும் தலத்தில் திருக்கோயில்கொண்டு, அடியவனாகிய என்னுடைய வினைக்கீடாக வந்த உடலினிடத்துப் புகுந்து வீற்றிருந்தமையால் அவ்வுடல் மேலான திருக்கோயிலாயினது என்பது இத்திருப்பாட்டின் திரண்ட பொருளாம்.

ஈண்டுக் கருவூர்த்தேவர் உடல் விழுமிய விமானம் ஆமாறும், உயிர்கள் உலக நிலை நீங்கிச் சிவநிலை பெறுமாறும் உவமை முகத்

தால் உணர்த்துகின்றனர். இறைவனை முன்னிலைப்படுத்திப் பேரொளியே! நாயகனே! என்று விளித்து, நீ என்னுடலில் புகுந்து விளங்கினமையால் என்னுடல் விழுமிய விமானம் ஆயிற்று என்று வியப்புறுகின்றனர். உயிர்கள் அருள்நிலையடைதற்கு அவற்றின் அக விருளாகிய அறியாமை நீங்குதல்வேண்டும். அதுவே முதற்படியாகும். அறியாமையாகிய இருள் இறைவனாலே நீங்கப்பெறுதலின் இறைநிலை அறிவாதல்வேண்டும். அறிவொளியாகிய இறைவன் உயிர்களின் இருளாகிய அறியாமையைப் போக்க வல்லவன். இக்கருத்து பற்றியே இறைவனைப் பேரொளியே! என்று விளித்தார். ஒளி ஈண்டு அறிவைக் குறித்தது. இறைவன் அறிவு, காலத்தாலும் இடத்தாலும் வரைப்படுதலின்றி முற்றறிவுடைமை காரணமாக பேரொளியே! என்று குறித்தார். முற்றறிவினனாகிய இறைவன் உயிர்களது அறியாமையாகிய இருளை நீக்கியதும் அவற்றின்பால் எழுகின்ற பத்திவலையிற்படும் இயல்பினன். அத்தகைய அன்பு ஊறும் இடங்களையே தன் இருப்பிடமாகக் கொள்வன் என்பது உணர்த்த என் மனம் நெகமகிழ்ந்த பேரொளியே என்றார். தன் மனம் உலகவர் மனம்போல் அறியாமையாற் கட்டுண்டிருப்பதின்றி அன்பினாற் கசியுந்தன்மைத்தென்று குறிக்க நெக என்றுணர்த்தினர். அவ்வாறு அன்பூற்றுள்ள இடமே இறைவன் மகிழ்ச்சிக்குரியதாகும். "என்னுடையிருளை ஏறத் துரந்தும், அடியாருள்ளத்தன்பு மீதூரக் குடியாக்கொண்ட கொள்கையும் சிறப்பும்" (திருவாசகம்—கீர்த்தித் திருவகவல்—6—8) எனத் திருவாதவூரரும், "முகமெலாங் கண்ணீர்மல்க முன்பணிந்தேத்துந் தொண்டர், அகமலாற் கோயிலில்லை ஐயன் ஐயாறனார்க்கே" (திருவையாறு-திருநேரிசை—அ) எனத் திருநாவுக்கரசரும் அருளியன நினைவு கூரத்தக்கன.

மற்றும், கருவூர்த்தேவர் தன்மனம் உலகவர் மனம்போலின்றி இறைவன் வீற்றிருப்பதற்கு ஏற்ற வேறுபாட்டினைப்பெற்றுத் தகுதிவாய்ந்துள்ளமையை ஓர் உவமையான் விளக்குகின்றார். மண் வினைஞராகிய குலாலர் மண்ணைப்பிசைந்து பக்குவப்படுத்தி ஒரு சக்கரத்தின்மீது வைத்துச் சுழற்றி மண் கலங்களைச் செய்வர். அவற்றுளொன்று நீர்ச்சால் அது தண்ணீரைத் தாங்கி நிற்கும் பாத்திரம். இதனை இங்கு நிறையென்று குறித்தனர். மண்பாண்டங்களை ஆக்கிய பின்னர் அவற்றை நிழலில் உலர்த்துவர். ஈரம் நீங்கி உலர்ந்திருந்தாலும், அவற்றிடை நீரைப்பெய்து வைப்பின், அப்பாண்டங்கள் கரைந்துபோவது கண்கூடு. பெய்த நீரும் பாழ்படுவதாகும். அவற்றை நிழலில் உலர்த்திய பின்பு அவைகளின்மீது செம்மண்பூசித் தீயினிடை வைத்துச் சுடுவர். இம்முறையைச் சூளைவைத்தலென்பர். சுடப்பட்டபின் அம்மட்கலங்கள் வன்மைபெற்றுவிடுகின்றன. அவற்றிடை நீரைவிட்டு வைப்பின் பாண்டங்களும் கரைவதில்லை; நீரும் பாழ்படுவதில்லை. அது நன்கு காக்கப்பெற்று மக்கட்குப் பயன்படுகிறது. இத்திருப்பாட்டினில் பச்சை மண் பாண்டம் நீர்பட்ட போது கரைந்துபோகு மியல்பினைப் புனல் படவுருகி என்றார். தீயிடைச் சுட்டபின் அவை நீரைத்தாங்கி நிற்கும் பெற்றியைக் குறிக்க மண்டழல் வெதும்பிப் பூம்புனல் பொதிந்துயிரளிக்கும் வினைபடு நிறை என்றார். வினைபடு நிறையாவது நல்ல வேலைப்பாடுடைய நீர்ச்சால். நீர் உயிர்களுக்கு உணவாகி அவைகளைக் காக்குந்தன்மையைக் குறிக்க உயிர் அளிக்கும் என்றார். நீர் உணவாதல் சிறப்பற்றிப் பூம்புனல் என்று குறிக்கப்பட்டது. சுட்டமண் நிறை தன்னகத்தேயுள்ள நீரைத் தாங்கி நிற்கும் இயல்பைப் பொதிந்து என்று விளக்கினர். இவ்வுவமை உலகியலில் பொருள்கள் பயன்படும் முறைமையைக் கற்பிக்கின்றது.

இனி இவ்வுவமையால் பெறப்படும் உண்மைப் பொருளை ஆராய்வாம். பச்சை மண் கலமும் சுட்டமண் கலமும் வடிவத்தால் ஒத்து விளங்குவன. உடலும் அதனிடை விளங்கும் கரணங்களும் மாயையின் காரியங்கள். அம்மாயா காரிய உடல் திருவருள் பெற்ற உயிரின் உடலை வடிவத்தால் ஒக்கும். பச்சை மட்கலம் போன்றது மாயா காரியமாகிய உடல். இவ்வுடலினுள்ள உயிர் பசு பாச பந்தனுய் இறையருள் பெறுதற்குத் தகுதியற்றது. தகுதியின்மையால் நீர்பட்ட பச்சை மட்கலம் கரைந்துபோதல்போல் அவ்வுயிர் செத்துப் பிறப்பதே தொழிலுடையதாகும். சுட்ட மட்கலம் திருவருள் பெற்றவர் உடல்போன்றது. அதுநீரைத் தாங்கும்

தகுதியுடைத்தாதல் போன்று திருவருள் பெற்றவர் உடல் இறைவனை ஏற்று விளங் கும் பக்குவமுடையதாகும். திருவருள் பெரு தான் உடற்கரணங்கள் மாயாகாரிய பசுகர ணங்களாகவே விளங்குவன. அங்ஙனமின்றி திருவருள் பெற்றார் உடற்கரணங்கள் சிவகர ணங்களாகத் திகழ்வன. இவ்விருதிறத்தா ருக்கும் வேறு வேறு கரணங்கள் வந்து பொருந்துவன என்பது ஆகாது. திருவருள் பெருதான் அருள் நெறி புகுந்து இறையரு ளால் பக்குவம் அடைகின்ற போழ்து அவன் பால் விளங்கும் மாயாகாரிய கரணங்கள் தமது தன்மை கெட்டுச் சிவகரணங்களாக மாறுவன என்பது சாத்திரங்களின் துணிவு; அனுபவமுமாகும். "மன்னு சிவன்தனை யடைந்து நின்றவன்றனுலே மருவு பசுகர ணங்கள் சிவகரணமாகத், துன்னிய சாக்கிர மதனில் துரியாதீதந்தோன்ற முயல் சிவாநு பவஞ் சுவாநுபூதிகமாம்" (சூத்திரம்-அ; செய்யுள்-நு) எனச் சிவஞானசித்தியாரும், "கூறும் நாவே முதலாகக் கூறுங்கரணம் எல்லாம் நீ" (திருவாசகம்-குழைத்தபத்து-ரு) என மணிவாசகனாரும், "நாக்குஞ் செவியுங் கண்ணு நீயென்பன் நான்நலனே யினிநா னுனை நன்குணர்ந்தேன்" (திரு அஞ்சைக் களம்-பண்-இந்தளம்-எ) எனச் சுந்தரரும் அருளியன அறியத்தக்கன. பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறும் வேறுபாடு உட லில் உச்சி முதல் உள்ளங்கால்வரை நிலவியது குறிக்க நிறைந்த வேதகம் என்றார். வேதகம் என்பது வேறுபாடு. இவ்வேறுபாடு உயிரினை யுண்மையைத் தெளியுமாறு செய்தது. இதனுல் இறைவ னது பெருங்கருணைத்திறம் விளக்கமாகும். எனவே உயிருக்கு இறைவன்பால் நன்றி செலுத்தும் வேட்கையெழ, உள்ளத்தே அன்பு பெருக, அதன் வன்மை கரைந்து காதற்கசிவு உண்டாயது. இவ்வாறு அன்பு ஊற்றுசுரக்குந்தலமே முற்றிவினனுகிய இறைவன் விரும்புமிடம்.

இனி இந்நிலை உயிர்கள் அடைய அவர் தம் மும்மலங்களைப் போக்கும் இயல்பினன் என்பதனை வரலாற்ருல் அறிவிப்பார் முனை படுமதின்மூன்றெரித்த நாயகனே என இரண் டாவதாக விளித்தார். ஈண்டு இவ்வரலாறு முப்புரங்களை இறைவன் புன்முறுவலினுல் எரித்ததாகும். முப்புரங்களை மும்மலங்கள் என்று மெய்ப்பொருள் காண்பர் திருமூலர். உயிருக்கு விளக்கஞ் செய்தலின்றி மயக்கஞ் செய்தலின் மும்மலங்கள் உயிருக்குப் பகை யாவன. "மயக்கமாயதோர் மும்மலப் பழ வல்வினைக்குள் அழுந்தவும்" (திருவாசகம்-திருக்கழுக்குன்றப் பதிகம்-எ) என மணி வாசனுர் அருளுவது அறியத்தக்கது. மலங் களின் பகைமையை அறிவிக்க முனைபடு என் ருர். போருக்கு எதிர்த்து வந்த என்றுரைப் பினும் அமைவதாம். "முனைத்து வருமதில் மூன்றும் பொன்ற அன்று முருகிய வெஞ் சிலை வளைத்துச்செந்தீமூழ்க, நினைத்த பெருங் கருணையன்" (திருநெய்த்தானம்-திருத்தாண் டகம்-ரு) என ஆளுடைய அரசுகள் விரித்த துணரத்தக்கது. அப்புரங்கள் மூன்றையும் தேவரெவரும் அழிக்க ஆற்றலிலராகி அஞ் சிச் சிவபெருமானை அடைக்கலம் புகுந்து அவைகளை ஒழிக்குமாறு வேண்டலும் இறை வன் நகையால் அவைகளை எரித்தமையான் உயிர்கள் யாவர்க்கும் தலைவரானமையை அறிவிக்க நாயகனே என்று விளித்தார்.

இனி முற்றறிவினனும் உயிர்களின் மும்மலங்களை ஒழிக்கவல்லவனுமாகிய இறை வனை வழிபடுவது கடமையாகும். அவ்வழி பாடு ஆன்மார்த்த பூசை எனவும் பரார்த்த பூசை எனவும் இருவகைத்து. பரார்த்தபூசை திருக்கோயில்களில் அமைவது கருதித் திரு முகத்தலையில் திருக்கோயில் கொண்டமை யைக் குறித்தார். ஆன்மார்த்தத்தையு முணர்த்த "அடியேன், வினைபடும் உடல் நீ புகுந்து நின்றமையால் விழுமிய விமான மாயினதே" என்றுரைத்தார். சிவபூசை முறையில் உயிர்க்குயிராயுள்ள இறைவனைப் பாவனையால் புறத்தே கொண்டுவந்து. உரிய பூசையை ஏற்றருளுமாறு வேண்டி அன் புடன் நிகழ்த்தி மீண்டும் அம்மூர்த்தியைப் பாவனையால் ஒடுக்கிக்கொள்வது விதிக்கப் பட்டுள்ளது. "என்னிலாரும் எனக்கினியா ரில்லை, என்னிலும் இனியானொருவன்னுளன், என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு, என்னுளே நிற்கும் இன்னம்பரீசனே" (திருஇன்னம்பர் - திருக்குறுந்தொகை — க) எனவரும் அப்பர் திருவாக்குக் கருதத் தக்கது. இங்கு விமானம் என்பது திருக் கோயில், புறத்தே விளங்கும் திருக்கோயிலி னும் அகக்கோயிலின் சிறப்பினையறிவிக்க விழுமிய என்று அடைமொழிதந்தார். அகக்

கோயில் ஏழு தாதுக்களாற் கட்டப்பட்ட உடலின் கண் விளங்குவது. அவ்வுடல் நல்வினை தீவினைப் பயன்களை நுகர்தற்குக் காரணமாக ஆக்கப்படுவது. அங்ஙனம் அமைந்த உடலில் இறைவன் அன்பு ஊற்றின் காரணமாக சிந்தையே கோயிலாக் கொண்டு விற்றிருக்கின்றுனதலினல் அவ்வுடல் மேலான திருக்கோயிலாயிற்று.

இத்திருவிசைப்பா ஒரு மெய்ப்பொருளை அறிவிப்பது. இதற்கு எடுத்துக்காட்டாக அமைவது அறுபான் மும்மை நாயன்மாருள் பூசலார் நாயனுரின் வரலாறுகும்; இராசசிம்ம பல்லவன் கட்டிய காஞ்சிக் கயிலாயநாதர் திருக்கோயிலெனும் கற்றளியினும் பூசலார் மனத்தினுல் முயன்ற கோயில் விரும்பி இறைவன் சென்று வீற்றிருந்து பூசனைகள் எல்லாம் ஏற்றமை நினைவு கூரத்தக்கது. ஆர்வார நீர்மையின்றி நினைவால் இறைவனைப் பூசித்துப் பெறுதற்கரியபேறு அடைந்தார் பெரியோர் என்பது தெளிவு. திருநாவுக்கரசரும்,

ஊனையே கழிக்கவேண்டில் உணர்மின்கள்
உள்ளத்துள்ளே
தேனைய மலர்கள் கொண்டு சிந்தையுட்
சிந்திக்கின்ற
ஏனைய பலவுமாகி இமையவர்
ஏத்தநின்று
ஆனையி னுரிவை போர்த்தார் அதிகை
வீரட்டனுரே.

(திருவதிகை வீரட்டானம்-திருநேரிசை-ந) என வருந்திருப்பாட்டின் விதித்தது கடைப்பிடிக்கத் தக்கதாம்.

---

**சென்னை-சிந்தாதிரிப்பேட்டை** :—ஆதிகேசவப்பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம் 1-4-61 முதல் 11-4-61 வரை நடைபெற்றது.

**பிட்சாண்டார் கோயில்** :—உத்தமர் கோயிலில் 2-4-61ல் நால்வர் பிரதிட்டை, திருமுறைக்கோயில் பிரதிட்டை, பதிகக்கல் திறப்பு விழா ஆகியவை அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் திரு. அ. உத்தண்டராமன் ஐ. ஏ. எஸ். அவர்கள் முன்னிலையில் நடைபெற்றன.

**சோளிங்கபுரம்** :—இலட்சுமிநரசிம்மசுவாமி கோயிலில் பக்தோசித சுவாமி திருக்கல்யாண மகோற்சவம் 1-4-61ல் நடைபெற்றது.

**சோளசிம்மபுரம்** ;—இலட்சுமிநரசிம்மசுவாமி கோயிலில் பிரம்மோற்சவங்கள் 19-4-61 முதல் 4-5-61 வரை நடைபெறும்.

**அம்பாசமுத்திரம்** :—காசிபநாதர் மரகதாம்பாள் கோயிலில் பங்குனித் திருவிழா 4-4-61 முதல் 13-4-61 வரை நடைபெற்றது.

**பாபவிநாசம்** :—பாபவிநாசசுவாமி கோயிலில் சித்திரைப் பெருவிழா 4-4-61ல் ஆரம்பமாகி 14-4-61ல் முடிவுற்றது. சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசையரங்குகளும் நடைபெற்றது.

**ஒப்பிலியப்பன்கோயில்** :—சீனிவாசப்பெருமாள் கோயிலில் பங்குனி பிரம்மோற்சவம் 2—4—61 முதல் 12-4-61 வரை நடைபெற்றது.

**தேரழுந்தூர்** :—ஆமருவியப்பன் கோயிலில் கம்பர் திருவிழா 1-4-61, 2-4-61 தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது. மாணவ, மாணவிகளின் கம்பராமாயணப் பாட்டு, பேச்சுப் போட்டிகளும், தமிழ்ப்பெருமக்களின் சொற்பெருக்குகளும் நடைபெற்றன.

**திருவள்ளூர்** :—மதகோபிலமடம் ஆதீனத்தைச்சேர்ந்த வீரராகவசுவாமி கோயிலில் கனகவல்லித்தாயார் சந்நிதி ஜீர்ணோத்தாரண பாலாலய பிரதிட்டை மகோற்சவம் 5-4-61ல் நடபெற்றது. ஷை வீரராகவ சுவாமி கோயிலில் சைத்ர பிரம்மோற்சவம் 21-4-61 முதல் 30-4-61 வரை நடைபெற்றது.

**திருக்குற்றாலம்** :—திருக்குற்றாலநாதசுவாமி கோயிலில் சித்திரை விசுத்திருவிழா 3-4-61 முதல் 13-4-61 வரை நடைபெற்றது.

# நவதிருப்பதி அநுபவம்

[திரு. K. பட்சிராஜன், B.A., B.L.]

**நான்காம் பாட்டு**

இழந்த எம்மாமைத் திறத்துப்போன
என்நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்
உழந்து இனியாரைக் கொண்டு உசாகோ
ஓதக்கட லொலிபோல எங்கும்
எழுந்த நல்லோதத் தொலிநின்று ஓங்கு
தென்திருப் பேரையில் வீற்றிருந்த
முழங்கு சங்கக்கையன் மாயத்து ஆழ்ந்தேன்
அன்னையர்காள் என்னைஎன் முனிந்தே.

*இழந்துபோன என் மாமை நிறத்தின் பொருட்டுப்போன என் நெஞ்சும் அங்கேயே தங்கிவிட்டது. இனிமேல் கஷ்டப்பட்டு யாரை உசாத்துணையாகக்கொண்டு என்ன பேசிப்பொழுது போக்கவல்லேன். எல்லாப் புறங்களிலும் வேதகோஷம் கடல்போல நிலையாய்நின்று ஓங்கி ஒலிக்கின்ற தென் திருப் பேரையில் தன் வீறுதோன்ற இருந்து முழங்கும் சங்கையுடைய கையனது ஆச்சர்ய சேஷ்டிதங்களிலே நானும் அழுந்திப்போனேன். தாய்மார்களே என்னை நீங்கள் கோபிப்பதில் பயனென்ன?*

இழந்த......... ..போன!

*முன்பே என் நிறம் என்னைவிட்டுப் போய்விட்டது. அது போனபின் தான் நாணும் நிறையும் போயின. மாமைபோனது முதலிலே தெரியாமல் நாணும் நிறையும் இழந்த பின்தான் தன் இழவை யுணர்ந்தது நெஞ்சு. அவனை நிறம்கொள்ள விருந்தது போக என் நிறமாயிற்று இழந்தது. அப்படி இழந்துபோன மாமையை மீண்டும் பெற வேண்டிச் சென்றது நெஞ்சு.*

என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்.

*போன நெஞ்சு 'இதோபோய் மாமையை மீண்டும் பெற்று வருகிறேன்' என்று மார் தட்டி வீரவாதத்தோடு தான் போயிற்று. அப்படிப்போன அம்மகாவீரர் என் நெஞ்சினார் இருக்கிறாரே, அங்கேபோய் என்ன செய்தார். மாமை பெற்றபாடில்லை. பெறமுடியவில்லை என்றுவந்தாரா. வரவும் திராணியில்லை. அங்கேயே அவன் ஸந்நிதியிலேயே தங்கிவிட்டார். போன காரியம் மறந்து போய் தன் ஸ்வதந்த்ரமும் இழந்து, தன்னையும் என்னையும் மறந்து ஒழிந்துவிட்டது. என் நெஞ்சுதான். எனக்கு பவ்யமாயிருந்த நெஞ்சுதான். திடசித்தத்தோடு போன நெஞ்சுதான் எனினும் அங்கே தங்கித் தொலைந்தது என்று சிறிது வெறுப்பும், கலக்கமும் தோன்றக் கூறுகிறாள் நாயகி.*

மடநெஞ்ச மென்றும் தமதென்றும்
ஓர்கருமம்கருதி
விடநெஞ்சை யுற்றால் விடவோ
அமையும் அப்பொன்பெயரோன்
தடநெஞ்சம் கீண்டபிரானார் தமதடிக்
கீழ்விடப் போய்த்
திடநெஞ்சமாய் எம்மை நீத்து
இன்றுகாறும் திரிகின்றதே

*என்று முன் நெஞ்சைத்தானே அவன்பால் அனுப்பி அது மீண்டு வராமல் அலைந்துதிரிந்ததைக் கூறின ஆழ்வார்தான் இப்போதும் கூறுகிறார். முன் அதுபோய்ச் செய்த செயல் தெரியும். அதனால் நான் அதை அனுப்பவில்லை. அதுதானே வீரவாதம் செய்து போயிற்று என்பது "போன" என்றதன் குறிப்பு.*

*அப்படிப் போயிற்றே காரியம் கைகூடவில்லையானால் திரும்பி வந்துவிடக்கூடாதா. அங்கே கண்டவற்றில் மயங்கித் தன்னையும் என்னையும் மறந்து செயலற்று அங்கேகிடக்கிறது. என்ன மயக்கம் அவன் அழகிலே தான் ஈடுபட்டு அவனோடு முயங்க எண்ணி அவன் ஸந்நிதியையே சுற்றுகிறது.*

*"மடநெஞ்சமென்னும் பாடலையும்" "இழந்த வென்மாமை" என்ற இப்பாடலையும் உட்கொண்டுதானே வைஷ்ணவ சிகாமணியான பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்,*

"நீரிருக்க மடமங்கைமீர் கிளிகள்
தாமிருக்க மதுகரமெலாம்
நிறைந்திருக்க மடவன்னம் முன்னம்
நிரையாயிருக்க உரையாமல் நான்
ஆர்இருக்கிலும் என்நெஞ்ச மல்லதொரு
வஞ்சமற்ற துணைஇல்லை என்று

ஆதரத்திெைடு தூதுவிட்ட குறை
 யாரிடத்து உரைசெய்து ஆறுவேன்
சீரிருக்கும் மறைமுடிவு தேடரிய
 திருவரங்கரை வணங்கியே
திருத்து ழாய்தரில் விரும்பியோ கொடு
 திரும்பியே வருதலின்றியே
வார்இருக்கும் முலைமலர் மடந்தைஉறை
 மார்பிலே பெரியதோளிலே
மயங்கி இன்புறமுயங்கி என்னையும்
 மறந்துதன்னையும் மறந்ததே.

என்று பாடினர்.

உழந்து......உசாகோ!

என இரகசியமான குறைகளை எல்லாம் இதுவரை என் நெஞ்சுடன் கூறி ஆறியிருந்தேன். இனி என்னுடன் எப்போதும் உறைந்து என் கவலையுணர்ந்து என் குறை மொழிக்குச் சோம்பாமல் செவிசாய்த்து என்னுடன் சம்பாஷிக்கும் ஒரு துணையை கஷ்டப்பட்டாலும் வேறு எங்கே தேடிப்பெறுவேன். முன் மாமை இழந்தேன் பின் நாண் இழந்தேன்; நிறையிழந்தேன். இப்போதோ அவ்விழவையெல்லாம் சொல்லியாறுவதற்கு வசமாயிருந்த நெஞ்சையும் இழந்துவிட்டேன். இனி என் கவலையை என்னுள்ளே அடக்கி அதிலே மாயவேண்டியவளாய் விட்டேன்.

ஓதக்கடலொலி.........ஓங்கும்

வேதகோஷமானது ஒருகால் இருந்தது சிலபோதில்லை என்னுதே நித்யமாய் நிரந்தரமாய் நிலைத்து ஒலிக்கின்ற கடலில் அலை போல என்றும் சப்திக்கின்ற கடலில் அலை ஓய்ந்தாலும் தன் ஒலி ஓயாத.

தென்திருப்பேரையில் வீற்றிருந்த

தென்திருப்பேரையிலே தன்னை உடைகொள்ள எண்ணிய என் மாமையும், நாணும் நிறையும் முன் பறித்து இப்போது என்நெஞ்சையும் தன்காலிலே கட்டி அடிக்கின்ற வீறு தோன்ற இருக்கின்ற,

முழங்கு சங்கக்கையன்

அப்படி என்னைத்தான் கொண்ட வெற்றியை மறைவாக வையாதே தன் விபூதியெங்கும் பறைசாற்றும் சங்கத்தையுடையவன்.

மாயத்து ஆழ்ந்தேன்

இப்படி என் உடைமையை எல்லாம் சிறுகச் சிறுகப் பறித்து விளையாடும் சேஷ்டி தங்களை உடையவனது விளையாட்டிலே என்னை நான் பறிகொடுத்தேன். அவனது அழகு வெள்ளத்திலே நான் முழுகிவிட்டேன்.

அன்னையர்காள்......முனிந்தே

இது இயல்பிலே நடந்தவை. நான் திட்டமிட்டுச் செய்தவையல்லவே. என்னுல் இப்படி நடவாது தடுக்கக்கூடியதா. என்னையும் மீறி நடந்த இவற்றுக்கு தாய்மார்களே! நீங்கள் வீணே என்னைக் கோபிப்பதால் ஏதேனும் பயனுண்டா யோசனை செய்யுங்கள்.

இங்கே ஈட்டிலே ரஸமான பகுதி ஒன்று காணக்கிடைக்கிறது. நாயகியிடம் மார்தட்டிப்போன நெஞ்சு படையற்று அவரழகிலே ஈடுபட்டது என்று கூறி இராமாயணத்திலே சுகசாரணர் வானரப்படை வலியை ஒற்றவந்த வரலாற்றை உதாரணம் காட்டினர் நம்பிள்ளை. வந்த ஒற்றர் மீண்டு போய் இராவணனிடம் செய்தி சொல்லும் போது "ராஜாஹ்யேஷ விபீஷண:" என்று கூறியதாக வான்மீகர் கூறியதைக் காட்டுவர். கம்பனும்,

தார் உலாமணி மார்ப உன்தம்பியே
தேர்உலாவு கதிர்கள் இரண்டும்தன்
பேர்உலாவளவும் எய்தப் பெற்றனன்
நீர்உலாவும் இலங்கை நெடுந்திரு

என்றுர்.

விபீஷண ராஜா என்றும் இலங்கை ராஜ்யம் விபீஷணன் பெற்றுய் விட்டது என்றும் அவ்வொற்றர் இராவணனிடம் கூறினர்களாம். அப்படி இராவணன் சோற்றையுண்டும் அவர்கள் விபீஷணனை இராஜா என்பானென் என்னில். "எழுத்து உருவழியாதே கிடந்தாலும் புள்ளி குத்தினுல் அத்தைக் கழித்து மேலே போமாபோலே முடிகொடுக்குமவர் கையாலே கொடுக்கையாலே. என்றுலும் இராவணன் க்ரௌர்யத்தை அறிந்து வைத்தும் கூசாதே இங்ஙன் சொல்லுவான் என் என்னில் "சித்ரம் குத்துமோ என்றிருந்தார்கள்" என்பது ஈடு. ஏடுகள் எழுதும்போது ஒரு எழுத்தை விடவேண்டுமென்ருல் அதை அடித்து எழுதமாட்டார்கள். அதன் கீழே ஒரு புள்ளியைக் குத்துவார்கள். ஏடு படிப்போர் வார்த்தையைப் படிக்கும் போது புள்ளியைக் கண்டு அந்த எழுத்து அடிபடாமல் ஏட்டிலிருந்தாலும் அதைவிட்டுப்படிப்பார்கள். அதுபோல இராமன் விபீஷணனுக்கு இராஜ்யதானம் பண்ணினபோதே இராவணனுக்குப் புள்ளி குத்தப்பட்டது. எனவே உயிரோடு இராவணன் இருந்தாலும்

அவன் விட்டெண்ணப்படவேண்டிய எழுத்துப்போலே இருந்தவர் கோஷ்டியில் எண்ணப்படவேண்டியவனும் விட்டான். இனி அவன் கேவலம் ஒரு பொம்மை. பொம்மை குத்துமா என்று எண்ணி அவனிடம் பயமின்றி ஒற்றர் விபீஷணனை இராஜாஎன்றார்களாம். கம்பனும் இக்கருத்தைக்கொண்டே விபீஷணன் இலங்காராஜ்யம் அடைந்தாய் விட்டது என்று ஒற்றர் வாக்கிலே இறந்தகால வினையையிட்டுக் கூறினான்.

## ஐந்தாம் பாட்டு

"முனிந்து சகடமுதைத்து மாயப்பேய்
முலையுண்டு மருதிடைபோய்க்
கனிந்த விளவிற்குக் கன்றெறிந்த கண்ணபிரா
னுக்கென் பெண்மை தோற்றேன்
முனிந்தினி என்செய்திர் அன்னைமீர்காள்
முன்னி அவன்வந்து வீற்றிருந்த
கனிந்த பொழில் திருப்பேரையிற்கே காலம்
பெற என்னைக் காட்டுமினே."

கோபித்துச் சகடத்தை உதைத்து மாயத்தால் தாய் வடிவுகொண்டு வந்த பூதனை என்னும் பேயின் முலைப்பாலுண்டு, மருதமரங்களிடையே தவழ்ந்துபோய் பழுத்த விளங்கனியாய் நின்ற அசுரனைக் குறித்து கன்றாய்வந்த அசுரனை எறிந்த கிருஷ்ணனாகிய தலைவனுக்கு என் பெண் தன்மையை இழந்தேன். தாய்மார்களே என்னைக் கோபித்து என்ன காரியம் செய்தீர்கள்? அவன் முற்பட வந்து எழுந்தருளியிருக்கிற கனிகள் நிறைந்த பொழிலை உடைத்தான தென்திருப்பேரைக்குக் காலம் தாழ்த்தாமல் கொண்டுபோய்க் காட்டுங்கள்.

முனிந்து சகடம் உதைத்து

தாய்ப்பால் கிடைக்கக் காலம் தாழ்த்தது பொறாமல் கோபித்து அக்கோபத்திலே சிசுவாயிருந்த இப்பிறப்பிற்கேற்பக் கால்களை மடக்கி நீட்டுகையில் பட்ட சகடம் துகளாக நொறுங்க அதிலே கம்ஸனேவலாலே வந்து ஆவேசித்திருந்த அசுரன் மடிய. அசுரன் வந்திருக்கிறான் என்று முனியவில்லை. தற்செயலாக நிமிர்த்த அடிபட்டுப் பொடிந்தான் அசுரன்.

மாயப்பேய் முலையுண்டு

தாய்ப்பாலுக்குக் கரையும் மகவைத் தாய்வடிவிலே வந்து நச்சுப்பால் கொடுத்து மாய்க்க மாயத்தால் யசோதையாகவே வந்த பேய் பூதனை, அம்மாயக்காரியையும் மாயத்தால் பாலுண்ணும் பாவனையிலே அவள் முலைக்காம்பில் வாய்வைத்துப் பாலோடு உயிரையும் பற்றி உண்டவன்.

மருதிடைபோய்

தாய் வெண்ணெய் திருடினான் என்று உரலோடு அவள் தன்னைக் கட்டும்படி தன்னைத் தாழவிட்டு அவள் போனவாறே உரலையும்சேர்த்து இழுத்துத் தவழ்ந்து புணரேய் நின்ற மருதிடையே தான் நுழைந்து நுழையாத உரலையிழுக்கும் பாவனையில் அம்மரங்களிரண்டையும் சாய்த்து அம்மரங்களாய் நின்ற யமளார்ச்சுனர்களை பொடிபடுத்தி.

கனிந்த விளவிற்குக் கன்றெறிந்த

பழுத்த விளாமரமாய் நின்றான் ஒரு அசுரன். கண்ணால் மேய்ப்புறும் கன்றுகளோடு ஒரு கன்றாய் நின்றான் மற்றவன். கன்றைக் காலை வாரிப்பற்றி விளாவின்மேல் எறிந்து இருவரையும் முடித்தவன். மாயம் வல்ல இருவரும் என்ன செய்கிறான் என்று எண்ணுமுன்னே காரியத்தை முடித்தவன்.

கண்ணபிரானுக்கு

இப்பட்டி தன் பக்கல் வன்மமுடையார்க்கு வன்மஞ்செய்து ஆச்ரிதர் பக்கலிலே தன்னை அழியமாற்றித் தன் எளிமை அனைத்தையும் அள்ளிச்சொரிந்த கிருஷ்ணனுக்கு, அவ்வசுரர்க்குத்தான் தப்பித் தன்னை ஆச்ரிதர்க்கு எழுதிக்கொடுத்தவனுக்கு அப்படி எழுதிக்கொடுத்ததனாலேயே தலைவனானவனை. "சேஷியான தன்னை உண்டாக்கி சேஷத்வத்தினுடைய எல்லையிலே என்னை நிறுத்தினவனை" என்று ஈடு. கீதையில் "எல்லையில்லா அவதாரங்கள் நான் எடுத்தேன்" என்றானே அவ்வவதாரங்களனைத்தையும் ஒரு தட்டிவிட்டாலும் பின்னும் அத்தட்டு மேலேயே உயரும்படியாய்த்து கிருஷ்ணாவதாரம் என்பர். இவ்வவதாரத்தில் மேல்கண்டபடி அவன் முனிந்த முடிவுகளெல்லாம் பத்தர் பக்கல் அவனுக்குள்ள பரிவைக்காட்டும் முனிவுகள் என்பர் நம்பிள்ளை. "ஜாநாதி புருஷோத்தமம்" என்று அவனே சொன்னபடி தன் ஆணழகனைத்தையும் காட்டியன்றோ எல்லோருடைய உள்ளங்களையும் ஈர்த்தது.

என்பெண்மை தோற்றேன்

அந்த ஆணழகனுக்கு என் பெண்மை தோற்றது. இதில் வியப்பில்லையே என்கிறாள். தோற்காதிருந்தால் வியப்பு. ஒன்று இவளுக்குப் பெண் தன்மையில்லை அன்றி அவனுக்கு ஆண்மை நிறைவில்லை என்று ஏற்படும். அவன் "புருஷோத்தமன்" என்றால், இவள் 'நாரிணுமுத்தமை' என்றால் பின்னர் பெண் தோற்கை இயற்கைதானே.

"கூசமூன்றுலகும் காக்கும்
கொற்றத்தென் வீரக்கோட்டி
பேசுவா ரொருவர்க் காவிதோற்கிலன்
பெண்பால் வைத்த
ஆசைநோய் கொன்ற தென்றால்
ஆண்மைதான் மாசுணுதோ"

என்றான் இராவணன் பிராட்டியிடம். ஆனால் "ஆயிரநாமத்தாழி அரியினுக்கேவல் செய்வேன் நாயினை விரும்புவேனே நாண் துறந்தாவிநச்சி" என்று சீறினாள் அவள். புருஷோத்தமன் முன் "நாயெனத் தகுவமன்றே காமனும் நாமுமெல்லாம்" என்று இராவணனே ஒப்புக்கொள்கிறான். எனவே புருஷோத்தமனிடம் தோற்றபெண்மை முன்னே உண்மையில்லா ஆண்மை மாய்கிறது.

முனிந்தினி என்செய்திர் அன்னைமீர்காள்

இனி என்னை மீட்டுவிடலாமென்ற எண்ணமா? ஈடேறுமா. என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள் தாய்மார்களே. தாய்மார் என்றால் என் இதத்தையல்லவா நாடிச் செயல்படவேண்டும். செயத்தக்க செய்து நிற்கும் என்னை முனிகிறீர்கள். செயத்தகாததைச் செய்கிறீர்கள். இது உங்கள் தாய்மைக்கு அடுக்குமா?

காலம்பெற என்னைக் காட்டுமின்

நலங்கள் செய்வது தகாதது என்றால் பின் உன் இதம் நாடி நாங்கள் செய்யவேண்டுவதென்ன வென்கிறாய் என்று வினவுகிறார்கள் தாயர். காலம் தாழ்த்தாமல் என்னைக் கொண்டுபோய்க் காட்டுங்கள். இதுவரை அது இது என்று செய்து காலத்தை விரயம் செய்து விட்டீர்கள். இனியேனும் காலவிளம்பம் வேண்டாம். எங்கு கொண்டுபோக என்று தாய்மார் கேட்க.

கனிந்தபொழில் திருப்பேரையிற்கே

காலம் என்று ஒன்று வேண்டாதே எல்லாக் காலமும் கனிகள் நிறைந்த பொழிலையுடைய சோலைகளை உடைய தென் திருப்பேரைக்கு என்னைக்கொண்டுபோய் காட்டுங்கள். "கனிந்தமரம் என்றால் அசுரன் ஆவேசமுண்டு என்று அஞ்சவேண்டாத சோலை" என்று ஈடு. ஏன் அவ்வூர் என்று கேட்கிறீர்களா?

முன்னி அவன்வந்து வீற்றிருந்த

அவன் முந்துற முன்னம் எம்போலியர்க்கு முகங்காட்ட வென்றே வந்து தன் வீறெல்லாம் தோன்ற அங்கே எழுந்தருளியிருக்கிறான்.

## ஆறும் பாட்டு

"காலம்பெற என்னைக் காட்டுமின்கள்
காதல் கடலில் மிகப்பெரிதால்
நீலமுகில் வண்ணத் தெம்பெருமான்
நிற்கும்முன்னே என்கைக்கும் எய்தான்
ஞாலத்துஅவன் வந்து வீற்றிருந்த நான்
மறையாளரும் வேள்வி ஓவாக்
கோலச் செந்நெற்கள் கவரிவீசும்
கூடுபுனல் திருப்பேரை யிற்கே."

நீருண்ட காளமேகம் போன்ற நிறத்தை உடையவன் கண்ணுக்கு இலக்காகும்படி இதோ முன்னே நிற்கிறான்: ஆனால் கைக்ககப்படாமல் அம்மேகம் போலே, தூரஸ்தனுயுமிருக்கிறான். அதனால் அவன் கடல் புரைய விளைவித்த காதல் கடலைவிடப்பெரிதாயிற்று. இந்த பூமியிலே அவன் வந்து வீறு தோன்ற இருப்பதும், சதுர்வேதமும் வல்லவர் அவனுக்காராதனமான வேள்வியை இடைவிடாமல் செய்துகொண்டிருப்பதும் அழகிற செழுமையான நெற்கதிர்கள் கவரிபோல வீசுவதும், நீர்ப்பெருக்குடையதுமான தென் திருப்பேரைக்கு விரைவிலே என்னைக்கொண்டுபோய் காட்டுங்கள்.

காலம்பெற என்னைக்காட்டுமின்கள்

கொண்டு போகவா வேண்டாமா என்று சிந்தனைசெய்து காலம் தாழ்த்தற்குரிய போழ்தன்று. கடுகக்கொண்டு போய்க் காட்டுங்கள். இனி நீங்கள் தாமதப்படுத்தினல் மேல் நிகழ்பவைக்கு நான் பொறுப்பன்று. அவன்தான் வந்தருளட்டுமே என்றிருக்க வொண்ணுது அவனருள் பெறுமளவு ஆவி நில்லாது. அது மட்டுமல்ல,

காதல் கடலில் மிகப்பெரிதால்!

என் ஆசை திசையெலாம் கடந்து பெருகிற்று. கடல்புரையும் காதலை அவன் விளைவித்தான். ஆனால் அது அதோடு நில்லாமல் வளர்ந்துகொண்டே போகின்றது.

நீலமுகில்.........முன்னே

அக்காதலை விளைவித்த காரமர் மேனியன், இப்போதும் என் கண் முன்னே நின்று மேலும் காதலைப் பெருக்குகிறான். ஆஹா என்ன வடிவு. சிரமம் தீர்க்கவல்ல குளிர்ந்த நீருண்ட மேகம்போன்ற திருமேனி. அது முன்னே நின்றுகொண்டே இருந்தால் காதல் வளராமல் என்ன செய்யும்.

என்கைக்கும் எய்தான்!

முன்னேதானே நிற்கிறான் பற்றிக்கொள்வோமே என்றால் அவன் கைக்ககப்படும் எல்லையைத்தாண்டியல்லவா நிற்கிறான். மேகம் போன்றவன் அம்மேகம் கண்ணுக்கு விஷயமாய் கைக்கெட்டாது நிற்குமா போலே எட்ட நிற்கிறான்.

ஞாலத்து அவன் வந்து வீற்றிருந்த

தன் மேன்மையான இருப்புப்போல எட்டாத்தூரமின்றியே சென்று சேர்தற்கு எளிதாயிருக்கவே, இந்த பூமியிலே வந்திருக்கிறான். பாபஜன்மங்கள் மலிந்த இப்பூமியிலே. ஒருவர் வேண்டாதே தானேதன் அளிதோன்ற அர்ச்சையாய் வந்து, பரமபதத்திலிருக்கும் போதுள்ள மேனாணிப்புக்கு எவ்வளவும் குறையாதே தன் பெருமை தோன்ற எழுந்தருளியிருக்கும்.

நான் மறையாளரும் வேள்வி ஓவா

சதுர்வேதிகள் எப்போதும் ஆராதனம் செய்கின்ற ஆராதனமில்லாதபோது என்று ஒரு காலமின்றிக்கே ஸர்வதா ஆராதனம் நிகழ்த்துகின்ற,

கோலச் செந்நெற்கள் கவரி வீசும்

அழகிய செந்நெற்கதிர்கள் காற்றிலே அசைந்து அவனுக்குத் திருவாலவட்ட கைங்கர்யம் செய்யப்பெற்றதான. அங்குள்ள தாவரங்களும் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டபடி.

கூடுபுனல் திருப்பேரையிற்கே

செந்நெற்கள் ஆலவட்டம் பரிமாறுநிற்க அவை வாடாதபடி அவற்றுத்தாரகமாக குளிர்ந்தநீர் எப்போதும் பெருகி நிற்கும் தென்திருப்பேரையிலே, ஒரு நீரல்ல ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் முந்நீரும் கூடி நெல் வளர்க்கும் தேசம். அவற்றின் பாகவத கைங்கர்யமிருந்தபடி.

## ஏழாம் பாட்டு

"பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை
செற்ற பிரான்வந்து வீற்றிருந்த
பேரையிற்கே புக்குஎன் நெஞ்சம்நாடிப்
பேர்த்து வரவுஎங்கும் காணமாட்டேன்
ஆரைஇனி இங்கு உடையம் தோழீஎன்
நெஞ்சம் கூவவல்லாரும் இல்லை
ஆரை இனிக்கொண்டு என்சாதிக்கின்றது
என்நெஞ்சம் கண்டதுவே கண்டேனே"

பெரிய மதிளாலே சூழப்பட்டுக் கடல் மத்தியிலே இருந்த அழகிய இலங்கை நகரை அழியச்செய்த தலைவன் வந்து எழுந்தருளியிருக்கும் தென் திருப்பேரையில் புகுந்து அவனை நாடிய என் நெஞ்சு அங்கு நின்றும் திரும்பிவரும் செயலை நான் காணவில்லை. இனி எனக்கு வேண்டியவர் என்றிருப்பார் யாரை நான் உடையனாவேன். போன என் நெஞ்சைத் திரும்ப வரக்கூவ வல்லார் ஒருவரும் இல்லை. இனி யாரைக்கொண்டு என்ன காரியம் சாதிப்பது? ஒன்றுமில்லை. ஆகவே என் நெஞ்சைப் பின்பற்றி அது கண்டதையே நானும் காணத்துணிந்தேன்.

பேரெயில் சூழ்கடல் தென் இலங்கை

பெரிய மதிலை உடைத்தான இலங்கை. "கலங்கலில் கடும் கதிர்கள்மீது கடிது ஏகா, அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி எனல் அன்றால், இலங்கை மதில் இங்கிதனை ஏறல் அரிது என்றே விலங்கியகல்கின்றனர் விரைந்து" என்று கடல்கடந்த மாருதிகண்டு வியக்கும்படியான மதிலையுடைய இலங்கை ஒன்றல்ல பல மதில்களால் சூழப்பட்டது. மதில் மட்டுமேயோ கடலும் சூழ்ந்தது.மதிலை ஏதேனும் செய்து ஏறவோ தகர்க்கவோ செய்து பார்ப்போமென்று எண்ணினும் கிட்ட வரவொண்ணாதபடி கடல்சூழ்ந்த இலங்கை. கிட்டவந்தாலும் அதன் அழகை நோக்கினால் வந்த பகைவனுக்கும் அழிக்க மனம்வராத அழகையுடைய நகர் (தென்— அழகு).அங்கதனைத் தூதனுப்பப் பெருமாள் சிந்தனை செய்ய அது கூடாது என்று மறுக்கும் இளையபெருமாள் பெருமாள் திருவுள்

ளத்திலே இலங்கை நகரின் அழகு பதிந்து அவ்வுணர்விலே இதனை யழிக்காமலிருக்க வழியுண்டா என்று பெருமாள் ஆராய்வதாக எண்ணுகிருர்.

"மற்றிவ் விலங்கையின் வளமைநோக்கி
இறந்திது போதல் தீது
என்று இரங்கினை எனினும் எண்ணில்
சிறந்தது போரே என்ருன்"

என இலக்குவன் வாக்காகக் கம்பர்.

**செற்ற**

*அவ்விலங்கையை ஈடழித்த.*

**பிரான்**

*தலைவன்.*

**வந்து வீற்றிருந்த**

தானே என்னைக்காண எழுந்தருளி அருகிலே வீற்றிருக்கும். இலங்கை செற்ற அன்று முகத்தை மாறவைத்துக்கொண்டிருந் தாற் போலன்றிக்கே இப்போது பிரஸன்ன முகத்தராய் எழுந்தருளியிருக்கும்.

**பேரையிற்கே புக்கு என்நெஞ்சம் நாடி**

தென் திருப்பேரை நகரிலே புகுந்து என்னுடைய நெஞ்சு அவரைத்தேடி. இலங் கையைப்போல இதுவும் அழகிய நகர். ஆனுல் அதுபோல செறவேண்டிய நகரன்று. இலங் கையைச் செற்றவனே மனம் விரும்பி வர்த் திக்கும் நகர் அந்நகரிலேபோய் அவனைத் தேடுகின்றது என் நெஞ்சு.

## பேர்த்துவர வெங்கும் காணமாட்டேன்

போன நெஞ்சு கண்டால் வந்து எனக் குரைத்து என்னை யங்கே அழைத்துச் செல்ல வேண்டும். காணுவிட்டால் காணேம் என் ருவது வந்து சொல்லவேணும். என் நெஞ்சோ திரும்பவரும் சுவடே காணப்பெறு கிலேன்.

**ஆரை இனி இங்கு உடையம் தோழீ**

இனி எனக்கு ஆப்தராக நான் யாரை உடையேன். தோழீ நீயே சொல். என்ன வானுலும் நீ அன்னியள்தானே என்னில் முன் அவனுக்கு மாய்பவள்தானே. என் நெஞ்சே என்னை மறந்த பின் எனக்கு வேண் டியவர் ஆர்.

**என் நெஞ்சம் கூவ வல்லாரும் இல்லை**

போய் அங்கேயே தங்கிவிட்ட என் நெஞ்சை இங்கே திரும்பவரக்கூவ வல்ல வரையும் காண்கில்லேன். "கண்ணன் வைகுந்தனேடு என் நெஞ்சினுரைக்கண்டால் என்னைச்சொல்லி அவரிரைநீர் இன்னம்செல் வீரோ இதுவோதகவு என்றிசைமின்களே" என்று ஹம்ஸங்களையே நான் பிரார்த்தித்து அவைக் குடிச்சீர்மையில் அன்னங்களாய்ப் போனமை நீ அறிதியே. அவையே அப்படி ஆனபின் இனி என் நெஞ்சைக் கூவவல்லார் யாவர்.

**ஆரைஇனி......சாதிக்கின்றது**

ஆப்தரும் போய்த் தங்கினுல், அவரைக் கூவ வல்லாரும் இல்லையானுல், இனி யாரை எனக்கு வேண்டியவர் என்று கொள்வது. என்ன காரியம்தான் சாதிப்பது. ஒன்று மில்லை அதனுல்,

**என் நெஞ்சம் கண்டதுவே கண்டேனே!**

என் நெஞ்சு எதைக் கண்டு அங்கே தங் கிற்றே அதையே நானும் போய்க்காண்பது என்று நிச்சயித்து விட்டேன்.

(தொடரும்)

---

**திருக்கண்ணங்குடி** :—காளகஸ்தீசுவரர் கோயிலில் 31-3-61ல் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

**திருத்தருப்பூண்டி** :—பவஔசதீசுவரர் கோயிலில் சித்திரைப்பெருந்திருவிழா 9-4-61 முதல் 3-5-61 வரை நடைபெற்றது. சமயச்சொற்பொழிவுகள் 13-4-61 முதல் 30-4-61 வரை நடைபெற்றன.

**திண்டுக்கல்** :—காளகஸ்தீசுவரசுவாமி, பத்மகிரீசுவரசுவாமி கோயில்களில் பிரம்மோற்சவம் 18-4-61 முதல் 29-4-61 வரை நடைபெற்றது.

**குமாரவயலூர்** :—சுப்பிரமணியசுவாமி கோயிலில் 17-4-61, 20-4-61, 30-4-61 தேதி களில் திருவிழாக்கள் நடைபெற்றன.

# சண்டேசுவர நாயனர்

[வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்]

## திருத்தொண்டத் தொகை

திருத்தொண்டத் தொகையுள் திருக்குறிப்புத்தொண்ட நாயனரை அடுத்துத் தனியடியார் வரிசையுள் பத்தொன்பதாம் எண்ணுமுறைமைக்கண் நிற்பார் சண்டேசுர நாயனர். இவரைப் பற்றிக் கூறும் திருத்தொண்டத்தொகைப் பகுதி,

"மெய்ம்மையே திருமேனி
வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள்
மழுவினு லெறிந்த
அம்மையான் அடிச்சண்டிப்
பெருமானுக் கடியேன்"

என்பது.

## பழைமையும் பெருமையும்

நாயன்மார்களை நம்பியாரூரர் எடுத்தோதித் தொகுப்பதற்கு முன்பே மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய அருளாசிரியர்களால் எடுத்தோதிப் போற்றப்பெற்ற பழைய நாயன்மார் ஒருசிலர் உளர். அவருள் இச் சண்டேசுர நாயனர் ஒருவர். இன்னும் இவரைப் பற்றிய குறிப்புக்களை நாம், திருமந்திரம், பதினென்ருந் திருமுறையில் உள்ள பழைய பிரபந்தங்கள் இவற்றிலும் காண்கின்ரும். ஆகவே, இவரது வரலாறு சைவ சமயத்தில் ஒரு தனிமுதன்மை பெற்ற வரலாறு என்பது விளங்கும். இன்னும் சிவபிரான் திருக்கோயில்களில் இவருக்கு நாயன்மார் வரிசை மட்டுமன்றிக் கடவுளர் வரிசையிலும் ஒரு குறிப்பிட்ட தனியிடம் இருத்தலும், அவ்விடத்தில் இவரது திருக்கோயில் இன்றியமையாததாய்க் காணப்படுதலும் இவரது தனிச் சிறப்பினை அறிவிப்பனவாகும்.

அவ்வவர் தம் தம் இல்லங்களில் தம் பொருட்டாக வழிபடும் ஆன்மார்த்த சிவபூசையிலும் பூசையின் முடிவில் இவரது வழிபாடு இன்றியமையாது செய்யப்படுவதாம். 'சண்டேசுர பூசையை ஆன்மார்த்த வழிபாட்டில் சிலர் விலக்குதல் முறையன்று' என்பதை, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் இந்நாயனரது புராணச் சூசனத்துள் விளக்கியிருத்தலைக் கொண்டும் உணரலாம்.

இவரது வரலாறு சைவத்துள் இத்துணை முதன்மை பெற்று விளங்குதற்குக்காரணம், 'இறைபணிக்கு ஆவனவற்றைச் செய்தலைவிடச் சிறந்த அறம் வேறென்றில்லை' என்னும் அதன் உண்மைக்கு அவ்வரலாறு மிகச் சிறந்த இலக்கியமாய்த் திகழ்தலேயாகும். இதனைச் சேக்கிழாரும் இவரது புராணத்தின் முடிவில் இனிது விளக்கியுள்ளார்.

ஏனைய நாயன்மார்களைப் போல இவரைப் பெயரளவிலன்றி இவரது வரலாறு முழுவதும் ஒருவாறு இனிது விளங்க எடுத்தோதியே கூறியருளினர் நம்பியாரூரர் என்பது மேலே காட்டப்பட்டபட்ட திருத்தொண்டத்தொகைப் பகுதியை நோக்கின் இனிது விளங்கும். இனி அவ்வரலாற்றின் விரிவைக் காண்போம்.

## நாயனரது திருவவதாரக் குறிப்புக்கள்

சண்டேசுர நாயனர் அவதரித்த தலம் சோழநாட்டில் மண்ணியாற்றின் தென்கரையில் உள்ள திருச்சேய்ஞலூர். இது, முருகக்கடவுள் கிரௌஞ்ச கிரியையும் தாரகாசுரனையும் அழித்தபின்னர்ச் சூரபதுமனை அழித்தற்குப் பூத வெள்ளத்துடன் தென்றிசை நோக்கிச் செல்லும்பொழுது தங்கிச் சிவபிரானை வழிபட்ட தலம்; அந்தணர்கள் நிறையப் பெற்றது. முருகப்பெருமானல் இத்தலம் உண்டாக்கப்பட்டதையும் அப்பெருமான் சிவபிரானை வழிபட்டதென்பதையும், இது வடமொழியில் 'குமாரபுரி' என்று கூறப்பட்டது என்பதையும் கந்தபுராணத்தால் அறிய

லாம். முருகப் பெருமானால் உண்டாக்கப் பட்டமையாலே தமிழில் 'சேய்ஞலூர்' என்றும் வடமொழியில் 'குமாரபுரி' என்றும் பெயர்பெற்றது என்பது வெளிப்படை. சிவகுமாரராகும் பேற்றினைப் பெறுபவ ராகிய நாயனார் குமாரக் கடவுளால் உண் டாக்கப்பட்ட குமாரபுரியில் தோன்றியது சாலப் பொருத்தமே.

சேய்ஞலூர் அந்தணர்கள் நிறையப் பெற்றது என்பதற்கு ஏற்பவே இதன் வருணனையைச் சேக்கிழார் அமைத்துள்ளார். அவ்வருணனையின் இறுதியில் அரியதொரு பாடலை அவர் அருளிச் செய்துள்ளார்.

''பண்ணின் பயனும் நல்லிசையும்
பாலின் பயனும் இன்சுவையும்
கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும்
வேதப் பயனும் சைவமும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின்
வளத்தின் பெருமை வரம்புடைத்தோ''

என்பதே அது. சைவத்தின் உயிர்க்கொள் கையாய் உள்ள உண்மையை யாவரும் போற்றுமாறு விளக்கிய நாயனார் தோன்றப் பெற்ற தலமாயின் அது நிலவுலகத்தின் பயனாய் உள்ளதென்பது உண்மையே யன்றோ!

அன்ன பெருமையை யுடைய அச் சேய்ஞலூரில் அந்தணர் குலத்தில் காசிப கோத்திரத்தைச் சேர்ந்தவனாகிய 'எச்ச தத்தன்' என்பவனுக்கும், அவன் மனைவி 'பவித்திரை' என்பவளுக்கும் புதல்வராய்த் தோன்றியவரே சண்டேசுர நாயனார்.

## பெற்றோர் இயல்பு

எச்சதத்தன், சிறந்த நாயனாராகிய சண்டேசுரரைப் பெறுதற்குரிய தவத்தைச் செய்தவனாயினும், அவரது சிறந்த நற்பண் பிற்கு நேர்மாறான தீய பண்பினையுடைய வனாய் இருந்தான். அதனால் அவனைக் குறிக்குமிடத்துச் சேக்கிழார்,

''அருமை மணியும் அளித்துஅதுவே
நஞ்சும் அளிக்கும் அரவுபோல்
இருமை வினைக்கும் ஒருவடிவாம்
எச்ச தத்தன்''

எனக் குறித்தருளினார். அவன் அவ்வா றிருப்பினும் அவன் மனைவி பவித்திரை நற் பண்புடையவளாயே விளங்கினாள்.

## இளமைப் பருவம்

சண்டேசுர நாயனாரது பிள்ளைத் திருப் பெயர் 'விசார சருமர்' என்பது. 'விசாரர்' என்பது, (வேதம் முதலிய கலைகளை) ஆராய் பவர் எனப் பொருள்தரும். 'சருமர்' என் பது அந்தணர்களுக்குரிய சிறப்புப் பெயர் களுள் ஒன்று.

ஐந்தாவது வயதிலே விசார சருமருக்கு எழுத்தறி கல்வி தொடங்குவிக்கப்பட்டது. தொடங்குவித்த இரண்டாண்டுகளிலே, முற் பிறப்பின் தொடர்ச்சியால், அரும்பில் அடங்கியிருந்த மணம் அதுபோதாகி மலருங் காலத்து வெளிப்படுதல்போல, வேத சிவ காமப் பொருள்களெல்லாம் அவரது உள்ளத் திலே விளங்கி நிற்பவாயின.

ஏழாம் ஆண்டில் முறைப்படி அவருக் குப் பெற்றோர் உபநயனம் செய்வித்தனர். உபநயனம் செய்விக்கப்பெற்ற பின்னரே வேத வேதாங்கங்களை ஓதுவித்தல் மரபு. அதன்படி அவற்றை இவருக்கு ஓதுவிக்குங் கால், ஓதுவிப்போர்க்கு முன்பே அவற்றை இவர் உணர்ந்துரைத்தலைக் கண்டு, அந்தணர் பலரும் அதிசயித்தனர். அவை எல்லா வற்றையும்விட மேலான அதிசயம் ஒன்று அவர்பால் காணப்பட்டது. அது, 'அளவில் லாத எல்லா மெய்ந்நூல்களின் முடிந்த பொருளாயும் உள்ளது சிவபெருமானுடைய திருவடியே' என்னும் தெளிந்த உணர்வு அவர்க்கு உண்டாகியதேயாம். மிக இளைய பருவத்தே மிகப் பெரிய கலைவல்லுநர்க்கும் கூட அரிதாகிய இவ்வுணர்வை யுடையரா னமை குறித்து இவரைச் சேக்கிழார், ''சிறிய பெருந்தகையார்'' என்னும் ஓர் அரிய தொட ரால் குறித்தருளினார்.

''அலகில் கலையின் பொருட்கெல்லை
ஆடுங் கழலே எனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினில்
தெளிந்தார் சிறிய பெருந்தகையார்''

என்பதே அத்தொடர் அமைந்துள்ள பகுதி. ''செலவு மிகுந்த சிந்தை'' என்றது, 'பல நூல்களினும் அலைகியும் அகன்றும் சென்ற அறிவு' என்றவாறு.

### திருத்தொண்டில் ஆர்வம்

இத்தெளிவு காரணமாக விசார சருமர் சிவபிரானிடத்தே அன்பு மீதூரப் பெற்று, 'அப்பெருமானது திருவடிக்கு யாதாயினும் ஒரு திருத்தொண்டினை மேற்கொண்டு செய்துவருதல் வேண்டும்' என்னும் அவா மிக்குடையவராயினூர்.

### ஆனிரை மேய்க்கும் திருத்தொண்டினை மேற்கொள்ளல்

அங்ஙனம் இருக்கும் நாட்களில் ஒரு நாள் வேதத்தை ஓதும் மாணவர் கூட்டத்தோடு ஆனிரையின் (பசுமந்தையின்) இடையே செல்ல நேர்ந்து, அவ்வாறு இவர் சென்றுகொண்டிருந்தபொழுது, கன்றை ஈன்ற பசு ஒன்று அவ்வானிரையை மேய்க்கும் ஆயனை முட்ட, அவன் சிறிதும் கூசுதல் இன்றிக் கோலால் அதனைப் புடைத்தான். அதனைக்கண்ட விசாரசருமர் ஆவின்மீது உண்டகிய அன்பினூல் ஆயனை வெகுண்டு தடுத்து, ஆனினங்களின் பெருமைகளையெல்லாம் நினைவு கூர்ந்து, 'ஆனினங்களை விடச் சிவபிரானுக்கு உவப்பைத் தருவன பிற இல்லை; ஆகையால், இவற்றை மேய்ப்பதே சிவபிரானுக்குச் செய்யும் சிறந்த தொண்டாகும்' எனத் துணிந்து, ஆயனை நோக்கி, 'இனி இவைகளை நீ மேய்த்தல் வேண்டா; யானே மேய்ப்பேன்' என்று கூறினூர். அவன் அவ்வூரில் அவருக்கு உள்ள பெருமையை அறிவானுகலின், மேலே ஒன்றும் சொல்ல மாட்டாது அஞ்சி அகன்றுன். பின்பு விசார சருமர், நிகழ்ந்தவற்றை அந்தணர்களுக்கு அறிவித்து அவர்களது இசைவைப்பெற்று, ஆனிரையைத் தாமே மேய்ப்பாராயினூர். அவர் ஆனிரையை மேய்த்து நின்ற நிலையைச் சேக்கிழார்,

"கோலுங் கயிறுங் கொண்டுகுழைக்
குடுமி யலையக் குலவுமான்
தோலும் நூலும் சிறுமார்பில்
துவள அரைக்கோ வணஞ்சுடர"

என எழுதிக் காட்டுகின்றுர்.

இவரைத் 'தெய்வ மறைச்சிறுவர்' எனவும் குறித்தார் சேக்கிழார். மறையவர் சிறுவராய், மாண்புற உண்டு, மனையிடத்தே வெயில்படாது இனிதிருக்கற்பாலராகிய இவர், இங்ஙனம் ஆனிரை மேய்த்து அலைவானேன்? கல்வியில்லாக் குறையினூலா? அதுவும் இல்லையே! அந்தணர் யாவரும் அதிசயிக்கத்தக்க பெருங்கல்வியுடையவரன்றே இவர்! அவ்வாறிருக்கவும் இன்னல் மிகுந்த இத்தொழிலை இவர் மேற்கொள்ளக் காரணம் என்னை? "அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே" என்னும் உணர்வும், அவ் "உணர்வின்கண் ஒழியாது ஊறும் வழியன்" பும், அவ்வன்பினூல் சிவபிரானுக்கு உரிய யாதேனும் ஒரு தொண்டினைத் தாம் செய்தல் வேண்டும் என்னும் அவாவுமேயன்றே! இவைகளே, பிறரிடத்தின்றி நாயன்மாரிடத்துக் காணப்படுவனவாகும்.

### ஆனிரை மேய்ப்பின் சிறப்பு

ஆயன் ஆனிரையை மேய்த்தது கூலியின் பொருட்டு; விசார சருமர் ஆனிரையை மேய்த்தது அன்பினூல். ஆகவே, அவரது மேய்ப்பு எவ்வாறிருந்திருக்கும் என்பதை நாம் உணர்ந்துகொள்ளலாம்.

உரிய காலங்களில் நல்ல பசும்புல் உள்ள இடங்களில் ஆனிரையைக் கொண்டு போய் மேயவிடுவார்; மேயவிடலாகாத இடங்களில் வளர்ந்திருக்கும் புற்களைப் பறித்துக்கொண்டு வந்து அவைகட்குக் கொடுப்பார்; ஆக்களின் உடம்பைத் தேய்த்தல் குளிப்பாட்டுதல் முதலியவற்றுல் அவற்றின் துன்பத்தைப் போக்குவார்; நல்ல நீர் உள்ள நீர்த்துறையில் நீரை உண்பிப்பார்: எக்காரணங்களாலேனும் ஆக்கள் அச்சங்கொண்டு வெருளுமாயின், அவற்றின் அருகிற்சென்று ஏற்ற முறையால் அவ்வச்சத்தை நீக்குவார்; நல்ல வழியிலே ஓட்டி நிழலுள்ள இடத்தில் தங்கச் செய்வார். இவ்வாறெல்லாம் செய்தும், பால் கறக்கும் நேரம் தவருதபடி ஆக்களை மாலையில் அவற்றிற்கு உரியவர் இல்லங்களிலே கொண்டு சென்று விடுவார்.

இவ்வாறு விசார சருமர் மேய்த்த அன்பு மேய்ப்பினூல் ஆக்கள் உடல் நலமும் அழகும் பெற்றுத் திகழ்ந்தன. நாளடைவில் அவ்வூரில் ஆனினங்களும் பெருகின. சிறப்பாக ஆயன் மேய்ப்புக்காலத்தில் கொடுத்த பாலைவிடப் பன்மடங்கு மிகுதியான பாலை ஆக்கள் கொடுத்தன. அதனூல், 'இப்பிரமசாரியின் மேய்ப்பு மிகவும் சிறந்திருக்கின்றது' என்று அந்தணர்கள் மிகவும் மன மகிழ்ச்சியுற்றனர்

### ஆனினங்களின் அன்பு

அன்பினால் மேய்க்கப்பெற்றமையால் ஆனினங்கள் விசார சருமரிடம் இயல்பாகவே அன்புடையவாயின. தம் கன்றுகள் தம்மை உடையவர் இல்லங்களில் பிரிந்திருப்பினும் இவரைக் கண்டபொழுது கன்றைக் கண்டதுபோன்ற நிலைமையுடையனவாய் அன்புமிகுந்து, கனைத்து, மடியில் பால் சுரந்து, கைதீண்டிக் கறக்காமலே பொழிந்தன.

### நாயனாரது சிவபூசை

தம்மைக் கண்ட உடன் ஆக்கள் தாமாகவே பால் பொழிதலைக் கண்ட விசாரசருமர், சிவபிரானுக்கு உரியதாகிய அதனை அவ்வாறே அப்பெருமானுக்கு ஆட்டக் கருதினர். அவர் ஆனிரை மேய்த்தலை மேற்கொண்டது, ஆக்கள் சிவபிரான் விரும்பி ஆடும் பால் முதலிய ஐந்தையும் தருவன என்னும் கருத்தினாலேயன்றோ! அதனால், அவை தாமாகவே சுரந்து பொழிந்த பாலை அப்பெருமானுக்கு ஆட்டக் கருதியது இயல்பே.

ஆக்கள் மேயுமிடத்துத் தாமாகச் சொரிகின்ற பாலை அரனார்க்கு ஆட்டுதற்கு, அரனார் திருமேனி அமைந்துள்ள திருக்கோயில் எவ்விடத்து அமைந்தது எனின், மண்ணியாற்றில் உள்ள மணல் திடர் ஒன்றில் ஆத்தி மரத்தின்கீழ் இலிங்கத் திருமேனியையும், அதனைச் சுற்றிலும் திருமூலட்டானம், சுற்றுமதில், கோபுரம் முதலியவற்றையும் மணலாலே விசாரசருமர் தாமே அமைத்தார். காண்போர்க்கு விளையாட்டாய்த் தோன்றினும், இச்செயல் முற்பிறப்பின் தொடர்ச்சியால் அவரிடம் நிகழ்ந்ததேயாம். திருக்கோயிலை அமைத்த பின்னர், அவர் இலைகளால் திருப்பூங்கூடை தைத்து, அதில் ஆத்தி முதலிய பூக்களைப் பறித்துச் சேர்ப்பார்; புதிய மட்குடங்கள் சிலவற்றை முயன்று கொணர்ந்து, அவற்றில் ஆ ஒன்றுக்கு ஒரு முறையாகச் சென்று அவற்றின் மடியைத் தொட்ட உடனே அவைபொழிகின்ற பாலைக் கொண்டு வந்து நிறைத்து வைப்பார்; முற்பிறப்பின் பழக்கத்தால் சிவபிரானை மணல் இலிங்கத்தில் முறைப்படி வழிபட்டுப் பாற்குடங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பால் முழுக்கினை மிகுதியாக ஆட்டுவார். பாலும் பூவும் தவிர ஏனைய பொருள்களைப்பெற இயலாமையால், அவற்றைத் தமது நினைவினாலே நிரப்பிக்கொண்டு பூசித்தார். இவ்வாறு பல நாட்கள் நடைபெற்றது. இப்பூசையும் விளையாட்டுப்போலவே தோன்றிற்றாயினும், நாயனார் அதனை அழுந்திய உள்ளத்துடன் உண்மையாகவே செய்தமையால், இறைவர் அதனை அவ்விடத்தில் அக்குறியில் நின்று ஏற்றருளினர். இது பற்றியே, "மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க" என்றருளிச் செய்தார் நம்பியாரூரர்.

### விசாரசருமர் செயலை அந்தணர் அறிதல்

நாயனாருக்குப் பாலைக்கொடுத்த போதிலும் ஆக்கள் தம் இல்லத்தார்க்குக் கொடுக்கும் அளவில் குறையவில்லை. அதனால், நாயனாரது செயலை அவர்கள் அறிய வழியில்லாதிருந்தது. ஆயினும், ஆக்களை உடைய அந்தணர்களுள் ஒருவனல்லாத அயலான் ஒருவன் ஒருநாள் மண்ணியாற்றில் நடைபெறுகின்ற நாயனாரது செயலைக் கண்டு, அதனை அந்தணர்களுக்கு அறிவித்தான்.

அந்தணர்கள் அவைகூடியிருந்து எச்சதத்தனை வருவித்து, 'உன் மகன் ஆக்களை மேய்ப்பதாகச் சொல்லி அவைகளை மண்ணியாற்றிற்குக் கொண்டுபோய் அவற்றின் பாலைக் கறந்து மணலில் ஊற்றி வருகின்றான்' என்று கூறினர். அதனைக் கேட்ட எச்சதத்தன், 'அந்தணர்களே, இச்செய்தியை இதுகாறும் யான் சிறிதும் அறிந்திலேன்; சிறுவன் செய்துவிட்ட இப்பிழையை இப்பொழுது பொறுத்துக் கொள்ளுங்கள்; இனி இவ்வாறு நிகழின் அஃது அவன் பிழையன்று, என் பிழையே யாகும்' என்று சொல்லி விடைபெற்றுச் சென்றான்.

சென்றவன் நிகழ்ந்ததைத் தன் மகனிடம் தெரிவித்து அதுபற்றி வினாவினானில்லை; அன்று வாளா இருந்து, மறுநாட்காலை அவர் ஆனிரைகளை ஓட்டிச் சென்றபொழுது, அவர் பின்னே அவர் அறியாதவாறு மறைந்து சென்றான்.

நாயனார், ஆக்களைக்கொண்டு சென்று வழக்கப்படி பல இடங்களில் மேய்த்து, நீருண்டி மண்ணியாற்றுத் திடரில் கொண்டுவிட்டார். அப்பால் என்ன நிகழ்கின்றது என்பதை அறிய எச்சதத்தன், அருகில் இருந்த குராமரம் ஒன்றில் ஏறி ஒளிந்திருந்தான்

ஆக்களை விட்டபின் நாயனார் மண்ணி யாற்றில் முழுகிவிட்டு வந்து, ஆத்தி நீழலில் மணலால் கோயில் முதலியவற்றை அமைத்து, பூக்கள் பறித்துவந்து வைத்து, ஆக்கள் பொழிந்து தரும் பாலைக் குடங்களில் நிறைத்துக்கொணர்ந்து இருத்தி, ஏனையவற்றையும் அமைத்துக்கொண்டு, விளையாட்டுப் போலக் காணப்படும் தமது அரிய வழிபாட்டைத் தொடங்கி, பெருமானது திருமுடிமேல் பூக்களைச் சாத்தி, பாற்குடங்களை எடுத்து, விருப்பத்துடன் பால் முழுக்கினை நிரம்ப ஆட்டினார்.

இச் செயல்களை மகிழ்ச்சியுடன் கண்டு களிக்க வேண்டியவனாகிய எச்சதத்தன் அவ்வாறின்றிப் பெருங் கோபத்துடனே அவைகளைக் கண்டான். அதனை நாம் நாயனாரது பெருமையை வெளிப்படுத்தச் செய்த சிவ பெருமானது திருவருட் செயல் என்றுதான் சொல்லுதல் வேண்டும்.

உடனே எச்சத்தன் குராமரத்தினின்றும் இறங்கிவந்து, கோல் ஒன்றினால் அவரது முதுகில் புடைத்துக் கடுஞ்சொற் கூறி வைதான். பெருவிருப்புடன் வழிபாட்டில் மனம் அழுந்தி யிருந்தமையால் எச்சதத்தன் செயலை நாயனார் அறிந்திலர். அதனால், அவன் மேலும் மேலும் அடிக்க, அப்பொழுதும் அதனை அறியாது பாலை எடுத்துச் சொரியும் பணியில் நாயனார் சிறிதும் இளையாதிருத்தலைக் கண்டு, எச்சதத்தன், நாயனார் அமைத்து வைத்திருந்த பாற்குடங்களைக் காலால் உதைத்துத் தள்ளினான்.

சுந்தரமூர்த்தி நாயனார், "ஏத நன்னிலம் ஈரறு வேலி" என்னும் திருப்பாடலில், "கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற தாதை" என்று அருளிச் செய்தமையால் சேக்கிழார் பாற்குடத்தை இடறியதாகக் கூறியது, அக்கொடுஞ்செயலை வேறொரு வகையால் மறைத்துக் கூறியதெனவே கொள்க. சுந்தரரும் "சிவன்றன்மேற் சென்ற" என்றே போயினமை கருத்திற்கொள்ளத் தக்கது.

## நாயனாரது வீரச் செயல்

இங்ஙனம் பெரியோர் வாயாற் சொல்லவும் அஞ்சும் அத்தீய செயலை எச்சதத்தன் செய்தபொழுது, அஃதொன்றே நாயனாருக்குத் தெரிவதாயிற்று. அதனைச் செய்த கொடியோன் தம் தந்தை என்றே அவர் அறிந்தும், அவன் செய்த செயலுக்கு அவனை அழித்தொழித்தலே முறையாதலை உணர்ந்து, தம் பக்கத்திற் கிடந்த கோலை எடுத்தார். எடுத்தபொழுது சிவபெருமானது திருவருளால் அது மழுவாயுதமாய் மாற, அதனால் எச்ச தத்தனது இரண்டு கால்களையும் வெட்டினார்; எச்சதத்தன் நிலத்தின்மேல் விழுந்தான்.

## பெருமான் திருவருள் புரிதல்

பின்பு விசாரசருமர் அந்த மழுவையே சிவபூசைக்கு வரும் இடையூற்றை நீக்கும் கருவியாக வைத்துக்கொண்டு முன் போலவே பூசையைத் தொடர்ந்து செய்யத் தொடங்கிய பொழுது, சிவபெருமான் உமையம்மையாரோடும் பூத கணங்களும், முனிவர் தேவர் முதலியவர்களும் துதித்துப் புடைசூழ்ந்து வர விடையின்மீது தோன்றிக் காட்சி வழங்கினார். அதனைக் கண்டவுடனே அன்பில் முதிர்ந்த சிறுவராகிய விசார சருமர் கீழே வீழ்ந்து வணங்கினார்.

அவ்வாறு வணங்கியவரைச் சிவபெருமான் தமது திருக்கையால் எடுத்து, 'நீ, நம் பொருட்டு உன் தந்தையை வீழ்த்தினாய்; அதனால், நாமே உனக்கு இனித் தந்தையாவேம்' என்று சொல்லி மார்போடு அணைத்து, உச்சி மோந்தார். சிவபிரானது திருக்கைகளால் தீண்டப்பெற்றமையால் விசாரசருமர் தமது மாயா காரியமாகியவுடம்பு பாசநிலை நீங்கிச் சிவமாம் நிலையை அடையப் பெற்று, இறைவரது திருவருள் வெள்ளத்தில் திளைத்து, அரிபிரமேந்திராதி தேவர்களும் அதிசயித்துத் துதிக்க, ஒளிவடிவாய் விளங்கினார்.

மேலும் சிவபெருமான் அவரை நோக்கி' 'நமக்கு நிவேதிக்கப்பட்ட பரிகல அமுதும்' அணியப்பட்ட பரிவட்டம் மாலை முதலியனவும் இனி உனக்கே உரியனவாகும்படி, சண்டேசுரனாய் விளங்கும் பதவியை உனக்கு அளித்தோம்' என்று சொல்லி அதற்கு அடையாளமாகத் தமது திருமுடியில் உள்ள கொன்றை மாலையை எடுத்து அவருக்குச் சூட்டியருளினார். எங்கும் பூமாரி பொழிந்தது; யாவரும் மகிழ்ந்தனர். விசாரசருமர் சண்டேசுரராகிச் சிவபெருமானுடன் சிவலோகத்தை அடைந்தார். அவரால் தண்டிக்

கப்பட்டமையால், எச்சதத்தனும் பல்லூழி காலம் நிரையத்திற் கிடப்பினும் நீங்காத பெருங்குற்றம் அப்பொழுதே நீங்கப் பெற்றுச் சுற்றத்தாருடன் சிவலோகத்தை அடைந்தான். சிவபிரானுக்கு மகனுராயினமையின் இவர் "சேய்ஞலூர்ப் பிள்ளையார்" எனக் கூறப்படுவர்.

## சண்டேசுவர பதவியாவது இன்னதெனல்

சண்டேசுர பதவியாவது, அடியார்களுக்குத் தலைமையாய் நிற்கும் பதவியே என்பதனை,

"அண்டர் பிரானும் தொண்டர் தமக்கு
அதிப னுக்கி"

எனவும்,

"சைவ - நல்லா ரேங்க நாயகமாம்
நங்கள் பெருமான் தொழுதணைந்தார்"

எனவும் சேக்கிழார் அருளியவாற்ருல் அறியலாகும். திருத்தொண்டத் தொகையுள், "அம்மையான்" என்றதும், அடியவர்கட்குத் தலைவர் என்றதேயாம்; என்னை? அது, 'தாய் போன்றவன்' எனப் பொருள்படுமாதலின்.

இனி, அடியார்களுக்குத் தலைமையாதலாவது, அடியார்களது திருத்தொண்டினைக் கண்டு சிவபிரானுக்கு ஏற்பித்தலும், அத்தொண்டிற்கேற்பச் சிவபெருமான் செய்யும் திருவருளினை அடியார்கட்குச் சேர்ப்பித்தலுமாம். எல்லாவற்றையும் பெருமான்தானே நேர்படச் செய்யவல்லவனுயினும், அவரவரது புண்ணியங்கட்கும் தவங்கட்கும் ஏற்ப ஒவ்வொரு செயலை ஒவ்வொருவர் வாயிலாகச் செய்தல்போல, இச்செயலை இவரது தகுதி நோக்கி இவர் வாயிலாகச் செய்வன் என்க. இங்ஙனம் இவருக்குச் சிவபெருமான் இச்செயலை அருளிய காரணத்தாலே, ஆன்மார்த்தம் பரார்த்தம் என்னும் இருவகைச் சிவ பூசைகளிலும் இவருக்கு இடமும் வழிபாட்டு முறையும் சைவாகமங்களில் உளவாயின; அவ்விருவகைப் பூசைகளின் முடிவிலும், திருக்கோயில் வணக்கத்தின் முடிவிலும் இவரை வழிபடுதல் இன்றியமையாததாயிற்று. நாயன்மார் அறுபத்து மூவருக்கும் மாணிக்கவாசகருக்கும் வழிபாட்டு முறை முதலியன சைவாகமங்களில் விதிக்கப்படுதலும் இங்குக் கருதத்தக்கது. 'சண்டன்' எனினும், 'சண்டி' எனினும் பொருந்தும். 'பெரு வலியுடையன்' என்பது பொருள்.

## இவ்வரலாற்று உண்மை

பாதகங்களிலெல்லாம் அதிபாதகமான தந்தையை - அந்தணனை - ஆசிரியனைக் கோறலாகிய செயலைச் செய்த இந்நாயனுருக்குச் சிவபெருமான் பெரியதொரு நற்பேற்றினை அருளியது வியப்பினும் வியப்பாதலையும், அஃது ஓர் அரிய பெரிய உண்மையை அறிவுறுத்துதலையும் பெரியார் பலரும் போற்றியுள்ளனர். அவற்றுட் சிறந்தன சிலவற்றை இங்கு நினைவுகூர்தல் இன்றியமையாததாகும்.

"தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாள்இரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர் தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்"

(திருவாசகம்)

"கடிசேர்ந்தபோது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை
[பண்டு
முடிசேர்ந்த காலை அறவெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் அறிவார்சொலக்
[கேட்டுமன்றே"

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

(இதில் 'அறிவார்' என்று அருளிச்செய்தது மணிவாசகப் பெருமானையேயாகும்.)

"தழைத்ததோர் ஆத்தியின்கீழ்த்
தாபரம் மணலாற்கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக்கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப்
பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார்
குறுக்கைவீ ரட்டனுரே."

—திருநாவுக்கரசர் தேவாரம்.

"ஏத நன்னிலம் ஈரறு வேலி
ஏயர்கோன் உற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற எறிந்தசண் டிக்குன்
சடைமி சைமலர் அருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே."

—சுந்தரர் தேவாரம்.

"தாதையைத் தாளற வீசிய சண்டிக்கிவ்
வண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும்
போனக மும்அருளிச்

சோதி மணிமுடித் தாமமும் நாமமும்
தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.''

(திருப்பல்லாண்டு)

''பாதக மென்றும்
பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத்
தாளிரண்டும்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம்
பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தஞ்செயலாற் றன்.''

—(திருக்களிற்றுப்படியார்)

இவ்வாறு இந்நாயனரது வரலாற்றுண்மை யாண்டும் சிறந்தெடுத்தோதிப் போற்றப்படுதலின், சேக்கிழார் இதனுண்மையை எடுத்தோதியே இவ்வரலாற்றினை முடித்துள்ளார். அது,

''வந்து மிகைசெய் தாதைதாள்
மழுவால் துணித்த மறைச் சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
அரனுர் மகனுர் ஆயினர்;
இந்த நிலைமை அறிந்தார் ஆர்!
ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே
தவமாம் அன்றே சாற்றுங்கால்!''

என்பது. இதனுள், ''இந்த நிலைமை அறிந்தார் ஆர்'' என்பதனை இறுதியில் வைத்து இவ்வுண்மையை (சிவத்தொண்டிற்கு அழிவு சூழ்தலைவிடப் பெரிய பாதகமும், அங்ஙனம் அழிவு சூழ்வாரைக் களைதலைவிடப் பெரிய புண்ணியமும் இல்லை என்னும் உண்மையை) உலகருள் யாவர் அறிய இயலும்!' என்றுரைத்துக் கொள்க.

இவ்வுண்மையைப் பின்னர்ச் சேக்கிழார், மேற்காட்டிய, 'கடிசேர்ந்த' என்னும் திருஞானசம்பந்தரது திருப்பாடலுக்குக் கருத்துரைக்குமிடத்து,

ஈசர்—மருவும்பெரும் பூசை மறுத்தவர்க்
கோறல் முத்தி—தருதன்மைய தாதல்''
என இனிது விளக்கியருளினர்.

மற்றும், இவ்வரலாற்ருேடு தக்கன் வேள்வியையும் புடைபட வைத்துக்காட்டி, உண்மையான் நோக்குமிடத்து, 'யாது அறமாகும்? யாது மறமாகும்?' என்பதனை,

''அரனடிக் கன்பர் செய்யும்
பாவமும் அறம தாகும்;
பரனடிக் கன்பி லார்செய்
புண்ணியம் பாவ மாகும்;
வரமுடைத் தக்கன் செய்த
மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த
பாதகம் நன்மையாய்த்தே''

எனத் தெளிவித்தது, 'சிவஞான சித்தி' என்னும் பெருநூல்.

''இதனை உலகத்தார் உடம்படமாட்டாராகலின், இகழ்தலே செய்வார்'' என்பதனை விளக்குவாராய், திருக்குறிப்புத் தொண்ட நாயனரது புராணத்தின் இறுதியிற்ருனே சேக்கிழார்,

''பேரருளின் மெய்த்தொண்டர்
பித்தனெனப் பிதற்றுதலால்
ஆருலகில் இதனுண்மை
அறிந்துரைக்க இசைந்தெழுவார்''

எனத் தோற்றுவாய் செய்தருளினர்.

சிவபிரான் 'பித்தன்' எனப் படுவோனுகலின், அவனது செயல் வரையறுத்தல் அரிது எனக் கூறுமுகத்தான், அப்பெருமானது சுதந்திரத்துவத்தைப் புலப்படுத்தினர் என்க.

எனவே, இந்நாயனரது வரலாறும், வழிபாடும் சைவசமயத்தில் ஒரு தனிச் சிறப்பை உடையனவாதல் அறியப்படும். அச்சிறப்பினை அறிந்து, மெய்ம்மையே திருமேனி வழிபட்டு உய்யும் பேரன்பினைப் பெறுதற்பொருட்டு யாம் இவரை வழிபடுவோமாக.

---

காஞ்சீபுரம் :—மெய்கண்டார் கழகத்தார் 18-4-61ல் திருவேகம்பநாதர் திருக்கோயிலில் திருமுழுக்கு வழிபாடு செய்தனர். மங்கையர்க்கரசியார் புராணம் என்பது பற்றித் திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள் விரிவுரை ஆற்றினர்கள். 22-4-61ல் கச்சியப்ப முனிவர் திருநாள் புனர்பூசத்தையொட்டி திருவாடுதுறை ஆதீனக் கிளை மடாலயத்தில் திருமுறை ஓதித் திருமுழுக்கு வழிபாடும் செய்தனர். 24-4-61ல் சிவஞான சுவாமிகள் திருநாளையொட்டி ஏகாம்பரநாதர் கோயிலில் திருமுறை ஓதி வழிபாடும் சமயச்சொற்பொழிவுக்கூட்டமும் நடைபெற்றன.



பத்மகாபபுரம் – நீலகண்டேசுவரர் கோயில்

# பத்மநாபபுரம்

கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்குளம் பகுதியில் பத்மநாபபுரம் என்ற ஊர் இருக்கிறது. திருவனந்தபுரத்திலிருந்து நாகர்கோயில் செல்லும் நெடுஞ்சாலையில் 32 கல் தொலைவிலுள்ள மணலி என்ற ஊரில் இறங்கி ஒருகல் கிளைச்சாலை வழியே சென்றால் இந்த ஊரை அடையலாம். திருவிதாங்கூர் மன்னர்களுக்கு இது முன்னால் தலைநகராக இருந்தது. ஊரைச்சுற்றி கோட்டை மதில்கள் உள்ளன. நடுவில் அழகிய பெரிய அரண்மனையொன்றும் இருக்கிறது. திருவனந்தபுரத்துக்கும் நாகர்கோயிலுக்கும் அடிக்கடி பஸ்கள் போகின்றன. அவைகளில் ஏறி இவ்வூரையடைலாம். தாசில்தார் மேற்பார்வையில் ஒரு சத்திரம் இருக்கிறது. தேவஸ்தானம் தங்கும் விடுதியொன்றும் உண்டு.

இவ்வூரில் முக்கியமான கோயில் நீலகண்டேசுவரர் எழுந்தருளியுள்ள சிவன் கோயில். இவ்விடத்திற்கு நீலகண்டேசுவரம் என்ற பெயருண்டு. கோயில் ஊருக்குக் கீழ்ப்பாகத்திலிருக்கிறது. கிழக்கு நோக்ம்யது. சுவாமி, அம்பிகை இருசந்நிதிகளுக்குந் நேரே வாயில்கள் உள்ளன. சுவாமி சந்நிதிக்கு நேருள்ள கோயிலின் வாயிலை ஐந்து மாடங்களையுடைய கோபுரம் அழகு செய்கிறது. கோபுரத்துக்குமுன் நீராழி மண்டபத்துடன் கூடிய தெப்பக்குளம் இருக்கிறது. (படம் பார்க்க). கிழக்கு, வடக்கு, தெற்கு

இந்த மூன்று புறங்களிலும் வாயில்கள் உள்ளன.

கோயிலுக்கு ஒரு வெளிப்பிரகாரம் உண்டு. அதில் தென்கிழக்கே சித்திரசபையும், தென்மேற்கு மூலையில் சாஸ்தாகோயிலும் உள்ளன. சுவாமி, அம்பிகை கோயில்களுக்குத் தனித்தனி உட்பிரகாரம் உண்டு. சுவாமியின் திருநாமம் **நீலகண்டேசுவரர்**; அம்பாளின் திருப்பெயர் **ஆனந்தவல்லி**. இவர்களின் இரண்டு சந்நிதிகளுக்கும் இடையில் விநாயகர், சண்டேசுவரர், பூதத்தான், சிதம்பரேசர் (நடராசர்) சந்நிதிகள் இருக்கின்றன. மேற்கு வெளிப்பிரகாரத்தின் மதிலுக்கு வெளியில் ஆறு அடி உயரமுள்ள சிவலிங்கம் இருக்கிறது. இதை **ஆதிமூலசுவாமி** என்றழைக்கின்றனர். இதுவே பழய கோயில் என்பர். இக்கோயிலில் மூன்றுகால பூசை நடைபெறுகிறது. பங்குனியில் 10 நாட்களும், புரட்டாசியில் பத்து நாட்களும் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. தை மாதத்தில் ஏழு நாட்கள் திருக்கல்யாண உற்சவம் நிகழ்கிறது.

திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்டவர்மர் மதுரை மீனாட்சியம்மையை வழிபடச் சென்றார். அவருடைய கனவில் மீனாட்சியம்மை தோன்றி அவருடன் வருவதாகச் சொன்னார். ஆதலின் அம்மன்னர் மீனாட்சியம்மைபோன்றே உருவம் செய்தமைத்து, பத்மநாபபுரத்தில் இக்கோயிலைக் கட்டினார் என்பது வரலாறு. மீனாட்சிதேவியைப் பிரதிஷ்டை செய்யும்போது மதுரை அரசர் திருமலைநாயக்கரும் திருவிதாங்கூர் மன்னருடன் இங்கு இருந்தாராம். அதை நினைவுபடுத்துவதற்காக அம்மன் சந்நிதியில் மார்த்தாண்டவர்மர், திருமலைநாயக்கர் இவர்களின் உருவச்சிலைகள் இருக்கின்றன. சித்திரசபையின் முன்னுள்ள தூண்களில் கர்ணன், அர்ச்சுனன், வேணுகோபாலர், கங்காளநாதர் இவர்களின் அழகிய சிலைகளும் காட்சியளிக்கின்றன. கர்ப்பக்கிரகச் சுவர்களில் கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

ஊரின் வடமேற்கு மூலையில் கேரள சிற்ப அமைப்புடைய **இராமசாமிகோயில்** இருக்கிறது. பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் விநாயகர் சந்நிதியிருக்கிறது. மூலஸ்தானத்தில் இராமர், சீதை, இலட்சுமணன், அனுமான் இவர்கள் சேவை சாதிக்கின்றனர். இராமர் உருவம் சிலையாலானது. மற்றவை உலோகத்தாலானவை. திருவிதாங்கூர் மன்னர்களுக்கு இந்த இராமமூர்த்தியும் குலதெய்வம் என்பர். கோயிலின் முன் ஒரு திருக்குளம் இருக்கிறது

வடக்குத்தேர் வீதியில் **பாலசுப்பிரமணியர் கோயில்** இருக்கிறது. இக்கோயிலுள் விநாயகர், பாலகிருஷ்ணர் சந்நிதிகளும் இருக்கின்றன. நான்கு வீதிகளுக்கும் நடுவே **பெருமாள் கோயிலும்**, தெற்கு மேற்குத் தெருக்கள் கூடுமிடத்தில் **சந்தி விநாயகர் கோயிலும்** இருக்கின்றன. தேவஸ்தான விடுதிக்கு எதிரில் **பகவதி கோயில்** இருக்கிறது. இதற்கு **ஆலம்பறை** என்று பெயர் சொல்கின்றனர். மக்கள் இதை மிகவும் புனிதமாகக் கருதுகின்றனர். இங்கு ஒரு பெரிய அரசமரமும் இருக்கிறது.

இங்குள்ள அரண்மனை அவசியம் பார்க்கத்தகுந்தது. அதற்குள் ஒரு அரும்பொருள் காட்சிச்சாலை (Museum) இருக்கிறது. தமிழ்க் கல்வெட்டுக்கள், மரத்தினாலும், கருங்கல்லினாலும் ஆன சிற்பங்கள், உருவங்கள், வண்ண ஓவியங்கள் முதலியன இருக்கின்றன. குபேரன், முருகன், அமர்ந்திருக்கும் நந்திகேசுவரர் இவர்களின் உருவச்சிலைகள் மிகவும் அழகானவை. அரண்மனையில் 64 மூலிகை மரங்களாற் செய்யப்பட்ட பெரியகட்டில் ஒன்றிருக்கிறது. அரண்மனை வளைவிற்குள்ளேயே **சரசுவதி கோயில்** ஒன்றும் திகழ்கின்றது.

---

**மதுரை** :—அழகர்கோயில்-ஸ்ரீ கள்ளழகர் கோயிலில் சுந்தரராஜப் பெருமாளின் சைத்திரோற்சவம் 26—4—61 முதல் 4—5—61 வரை நடைபெறும்.

**காட்டுமன்னார்கோயில்** :—வீரநாராயணப்பெருமாள் கோயிலில் பிரமோற்சவம் 21—4—61 முதல் 1—5—61 வரை நடைபெற்றது.

**அம்பாசமுத்திரம்** :—புருஷோத்தமப் பெருமாள் கோயிலில் சித்திரா பௌர்ணமி திருவிழா 20—4—61 முதல் 30—4—61 வரை நடைபெற்றது.

# சேக்கிழார் சுவாமிகள்

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

தூக்கு சீர்த்திரு தொண்டத் தொகைவிரி
வாக்கினுற்சொல வல்ல பிரானெங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி இருத்துவாம்.

சேக்கிழார் சுவாமிகளின் திருநட்சத்திரம் வைகாசிபூசம் அது இவ்வாண்டில் *20-5-1961*-ல் வருகிறது. ஆதலின் அவருடைய வரலாற்றில் ஒரு சிறிது அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். புலவர்களில் இருவரையே தெய்வ என்ற அடைமொழி கொடுத்து ஆன்றோர் அழைத்திருக்கின்றனர். ஒருவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவர்; மற்றவர் தெய்வச் சேக்கிழார். மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய "சேக்கிழார் பிள்ளைத்தமிழ்" என்ற நூலில் "தெய்வமணக்கும் செய்யுளெலாம்", "தெய்வச் சைவா" என்று சிறப்பித்துப் பேசுகிருர்கள்.

தொண்டை நாட்டிலுள்ள 24 கோட்டங்களில் ஒன்றுன புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூரில் அவதரித்தவர் சேக்கிழார். அருள்மொழிதேவர் என்பது அவருடைய பிள்ளைத் திருநாமம் என்று திருத்தொண்டர் புராண வரலாற்றுசிரியர் கூறுகிருர். சேக்கிழார் என்பது குடிப்பெயர், அவர் பிறந்த குடியை விளங்க வைத்தமையால் சேக்கிழார் என்ற சிறப்புப் பெயரே வழங்கலாயிற்று. சேக்கிழார் என்ற பெயருடையோர் பலர் அவருக்கு முன்னும் பின்னும் இருந்தனர் என்பதைக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். பாடல் பெற்றபதியான திருமழபாடிக்கோயில் கல்வெட்டு ஒன்று ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான்மாதேவடிகள் இராமதேவனுன உத்தம சோழப் பல்லவராயன்" என்று குறிக்கின்றது. இராமதேவன் என்று இதில் குறிக்கப் பெற்றிருப்பதே சேக்கிழாரின் இயற்பெயர் என்று சில ஆராய்ச்சிப் பேரறிஞர் கருதுகின்றனர்.

சேக்கிழார், முதலாம் இராஜேந்திரன் காலத்தவர், முதற்குலோத்துங்கன் காலத்தவர், இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவர், மூன்றும் குலோத்துங்கன் காலத்தவர் என்று பலவாருகக் கூறுகின்றனர். ஆனல் பெரும்பான்மையான ஆராய்ச்சியாளர் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவரே என்று கொள்கின்றனர். அந்த மன்னனின் காலம் கி.பி. 1133-50. ஆதலின் சேக்கிழார் பன்னிரண்டாம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவராகவேண்டும். சேக்கிழார் பெரிய புராணத்தில் பத்து இடங்களில் புகழ்ந்து பேசுகிருர். ஒன்பது இடங்களில் அநபாயன் என்றும், ஒரு இடத்தில் சென்னிஅபயன் குலோத்துங்கன் என்று கூறியிருக்கிருர்.

சேக்கிழார் பெருமானின் புலமைப் பெருமையையும் மற்றத் தகுதிகளையும் அறிந்த சோழமன்னன் அவரைத் தனது முதலமைச்சராக்கி, அவருக்கு உத்தமசோழப் பல்லவராயன் என்ற பட்டத்தையும் அளித்தான். அவர் வாயிலாக அடியார்களின் வரலாறுகளைக் கேட்டறிந்த அரசன் அவரையே ஒரு நூல் வடிவில் செய்து தந்தருளுமாறு வேண்டினன், குன்றை முனிவர் சிதம்பரம் சென்று இறைவனல் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்று, புராணத்தைப் பாடி முடித்தார். அரசனின் விருப்பத்திற்கிணங்க, ஒரு சித்திரைத் திருவாதிரையில் தொடங்கி மறுசித்திரைத் திருவாதிரை வரையில் தம்முடைய புராணத்தை அரங்கேற்றம் செய்து உரை விரித்தருளினர். அரசனும் அவரை யானை மேலேற்றி ஊர்வலம் செய்வித்து, தொண்டர்சீர்பரவுவார் என்ற பட்டத்தையும் கொடுத்தான்.

சேக்கிழார் தம்முடைய நூலுக்கு இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. செயற்கரிய செயல்களைச் செய்த பெரியார்களின் வரலாறுகளைக் கூறுவதால் மக்கள் அதற்குப் பெரியபுராணம் என்ற பெயரால் வழங்கலாயினர். முதல், வழி, சார்பு என்ற மூன்றுவகை நூல்களில் இது முதல் நூல் என்ற பிரிவைச் சார்ந்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொகையையும் நம்பியாண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியையும் அடிப்படையாகக்கொண்டெழுதப்பட்டமையால் தொகை, வகை, விரி என்றவற்றில் விரிநூலின்பாற்படும்.

பெரிய புராணத்தில் இரண்டு காண்டங்கள், 13 சருக்கங்கள், 4253 பாடல்கள் இருக்கின்றன. இந்தப் பெருநூலின் சிறப்பியல்களைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டியது மிக அவசியம்.

'உலகெலாம்' என்று இறைவனுல் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்ற பெருமையுடையது. "மெய்ம்மொழி வான்நிழல் கூறிய பொருளின் ஆகும்" என்று அவரே கூறியிருக்கிறார். உலகெலாம் என்ற இறைவன் திருவாக்காக அமைந்த சொல்லை பொன்னே போல் போற்றி நூலில் பதினுன்கு இடங்களில் கூறியிருக்கிறார்; சிறப்பாக முதலிலும், இடையிலும், கடைசியிலும் பெய்து அமைத்திருக்கிறார்.

பெரிய புராணம் உலகப் பொது நூல் என்பதற்குப் பல சான்றுகள் கூறலாம். பெரிய புராணத்தொண்டர்கள் வெவ்வேறு காலத்தவர், இடத்தவர், குலத்தவர், பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கை யுடையவர். மிக உயர்ந்த நிலையுடையோர், மிகத் தாழ்ந்தோர் பலர் அந்நூலில் காண்கிறோம். உலகின் பல சமயத் தலைவர்களின் இலட்சியங்களையுடைய பல தொண்டர்கள் பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ளனர். "மூவேந்தர் மொழி வழங்கும் நாட்டுக்கப்பால் முதல்வனுர் அடிச்சார்ந்த முறைமையோடும்" என்று உலகம் எங்கும் தோன்றிய அருட்தொண்டர்களைப் பெரிய புராணம் போற்றுகிறதென்றுல் அதை உலகப் பொது நூல் என்று கூறுமல் வேறு என்னென்று சொல்வது.

பெரிய புராணம் ஒரு பெருங் காவியம். திருவருட் காவியம் என்றே கூறினர் ஆன்ருேர். உலகம், உயிர், கடவுள், அறம், பொருள், இன்பம், வீடு, மலை, நாடு, நகர், காதல், வீரம் என்று காவிய இலக்கணத்திற்கு வேண்டிய உறுப்புக்களால் அந்நூலில் அமைந்திருக்கின்றன. காவியத் தலைவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். கதை கயிலாயத்தில் தொடங்கிக் கயிலாயத்தில் முடிவடைகிறது. நூலில் சுந்தரர் வரலாறு முதலிலும் இடையிலும், இறுதியிலும் அமைக்கப் பெற்றிருக்கிறது. சுந்தரர் வரலாற்றைச் சொல்ல வந்தவர் பல அடியார்களின் வரலாறுகளையும் அதனுட்படுத்திக் கூறியிருப்பதால் பேரிதிகாசம் என்றும் அந்த நூலைக் கொள்ளலாம்.

திருத்தொண்டர் புராணம் ஒரு சிறந்த பக்திநூல் என்பதை,

"பக்திச்சுவை நனிசொட்டச்
சொட்டப்பாடிய கவிவலவ"

"கல்லுங் கரையக் கவிபாடுங்
கனிவாய் முத்தம் தருகவே"

"நெஞ்சம் கனியக்கனியக் கண்ணீர்
வாரக் கவிபாடிய இறைவ"

என்று சேக்கிழார் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் போற்றி யிருக்கிருர். சேக்கிழாரடிகள் காதற் காட்சியைப் படைக்கும்போது பக்திச் சுவையையும் குழைத்து அளித்திருப்பதை சுந்தரர் - பரவையார் சந்திப்பைக் கூறும் பாடல்களில் காண்கிறோம்.

பெரிய புராணத்தில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பெற்றியைப் பல இடங்களில் பார்க்கலாம். அமங்கலச் சொற்களை அறவே களைந்து பாடும் பான்மை சேக்கிழாருக்கே உரிய தனிச் சிறப்பு. "நினைந்த அப்பரிசே செய்தான்" என்று மெய்ப்பொருள் நாயனுர் புராணத்தும், "தன் கருத்தேமுற்றுவித்தான்" என்று ஏனுதிநாதர் வரலாற்றினும், இப்போதிங்கவன் உதவான்" என்று அப்பூதியடிகள் சரிதையிலும் 'இருவர் மனமும் பேருவகை எய்தி அரியவினை செய்தார்" என்ற 'இடங்களில் அமங்கலச் சொற்கள் வராமல் கூறியிருக்கிருர்.

தாழ்ந்த வகுப்பினரை **ஐயர்** என்று அழைக்கும் முற்போக்கான எண்ணமுடையவர் சேக்கிழார். வேடரான கண்ணப்பரையும், ஆதித்தமிழர் வகுப்பினரான திருநாளைப் போவார் (நந்தனுர்), திருநீலகண்ட யாழ்ப்பாணர் இவர்களை ஐயர் என்று கூறியிருக்கிறுர்.

சங்ககாலத்தமிழ்ப் புலவர்கள் பெண்களுக்குப் பெருமை கூறினுர்கள். கம்பருக்குப் பிற்பட்ட புலவர்கள் பலர் பெண்களுக்கு இழிவு கற்பித்தார்கள். பெண்ணின் பெருமை பேசுவதில் சேக்கிழாரை விஞ்சிய புலவர்கள் இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. எடுத்த எடுப்பிலேயே தடுத்தாட் கொண்ட புராண முதற்பாட்டில்,

**மங்கையர் வதனசீத மதிஇரு மருங்கும் ஓடிச்**
**செங்கயல் குழைகள்நாடும் திருமுனைப் பாடிநாடு**

என்று நாட்டுப் பெருமையைப் பெண்ணின் பெருமையாக வைத்துப்பாடத் தொடங்குகிருர். அவள் என்று அவர் கூறுவதில்லை. அர், ஆர் விகுதிகளில்தான் கூறுவார். மனைவியர் என்றேதான் சொல்வார். ஒரு பணிப் பெண்ணை "சந்தனமாம் தையலார்," "சந்தனத்தார் எனும் தாதியார்" என்றும் அவர் கூறியிருப்பதே போதிய சான்ருகும்.

சேக்கிழாரின் பரந்து விரிந்த இலக்கிய அறிவை அவருடைய நூலில் நாம் யாண்டும் பரக்கக் காணலாம். சங்க நூல்கள், திருமுறைகள் இவைகளை நன்கு ஆராய்ந்திருக்கிருர். "முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்றும்" பெற்றிவாய்ந்தவர். தேவாரத்தில் தோய்ந்து அதனுடன் இரண்டறக் கலந்துவிட்டார். சம்பந்தர் 'மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக்கை மடமானி' என்று பாடியதை, "மங்கையர்க்குத் தனி அரசி எங்கள் தெய்வம் வளவர் திருக்குலக்கொழுந்து வளைக்கை மானி" என்று சேக்கிழார் மெருகு கொடுத்துப் பேசுகிருர்.

அமைச்சராக இருந்ததால் சேக்கிழார் நாட்டு நடப்பை நன்ருக உணர்ந்திருந்தார். பல ஊர்களையும் சுற்றிப்பார்க்கும் வாய்ப்பிருந்ததால் அவ்வவ்விடங்களிலுள்ள மக்களின் பழக்கவழக்கங்களை நன்ருக அறிந்து கொண்டார். பல தலங்களில் சென்று வழிபட்டமையால் அங்குள்ள கற்சிற்பங்கள், கல்வெட்டுக்கள், உருவச்சிலைகள் இவைகளை நன்கு ஆராய்ந்திருந்தார் என்பதற்குப் பல ஆதாரங்களை அவர் நூலில் காணலாம். கங்கைகொண்ட சோழபுரக் கோயிலிலுள்ள சண்டீசப்பதம், பழையாறையில் அமர்நீதி நாயனுர் குடும்பம், திருச்செங்கட்டாங்குடியில் சிறுத்தொண்டர் குடும்பம் இந்த உருவச்சிலைகளைப் பார்த்து அப்படியே அவர் பாடல்களில் காட்சிகளாக நம் கண் முன் கொண்டுவந்து நிறுத்துகிருர். முதலாம் இராஜராஜ சோழன் கட்டிய தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டொன்றில் 'தத்தா நமர் என்ற மிலாடுடையார்' என்று மெய்ப்பொருள் நாயனுரைக் குறிக்கிறது. சேக்கிழார் அந்த நாயனுர் புராணத்தில் 'தத்தா நமர் எனத்தடுத்து வீழ்ந்தார்' எனக் கல்வெட்டுச் சொற்களை அப்படியே பெய்தமைத்திருக்கிருர்.

பல வரலாற்றுண்மைகளை சேக்கிழார் பெரிய புராணத்திலிருந்து தெரிந்துகொள்கிருேம். அந்தப் புராணத்தை அவர் பாடியிராவிட்டால் பல மன்னர்கள், அடியார்களின் காலம், இடம், செயல் முதலியவைகள் தெரியாமலே மறைந்துபோயிருக்கக் கூடும். 'எண்டோள் ஈசற்கு எழுபது மாடங்கள்" கட்டிய கோச்செங்கட் சோழர், 'மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவி தொன்னகரம் துகளாக்கிய" சிறுத்தொண்டர், மகேந்திரவர்மன், ஐயடிகள் காடவர்கோன், நரசிங்க முனையரையர், கழற்சிங்கர், சேரமான் பெருமாள் இவர்களைப்பற்றிய குறிப்புக்களெல்லாம் திருத்தொண்டர் புராணத்தில் காண்கிருேம்.

"எல்லாப் பொருளும் இதன்பாலுள்ள இதில் இல்லாத எப்பொருளும் இல்லையால்" என்றபடி சேக்கிழார் நூலில் எல்லாக் கலைகளைப்பற்றியும் ஆங்காங்கே கூறப்பட்டிருக்கிறது." பித்தாபிறைசூடி" என்ற சுந்தரர் பாடலைக் குறிக்கவந்த சேக்கிழார் "கொத்தார்மலர்" என்ற பாடலில் பண்-இந்தளத்திற்கு இயையப்பாடியிருக்கிருர். அதனுல் அவருடைய இசைக்கலைப்புலமை இனிது விளங்குகிறது. நடனக்கலையை அப்பர் புராணத்தில் காணலாம்.

அமைச்சர் பெருந்தகையராயிருந்த சேக்கிழாருக்கு அரசியல் நன்கு தெரிந்திருந்தது

என்று சொல்லவும் வேண்டுமோ? ஆட்சி, ஆவணம், காட்சி என்று சாட்சியத்தை மூவகையாகக் கூறியிருக்கிறார். தற்காலத்தில் நீதிமன்றங்களில் ஆட்சி-Custom or oral evidence ஆவணம் — Documentary evidence, காட்சி-Eye witness or circumstantial evidence என்று பேசப்படுவதைக் காண்கிறோம்.

சேக்கிழாரின் செய்யுள் அழகு, உவமை நயம் இவைகளைப்பற்றி நிறையக்கூறலாம். 'சிவனடியே,' 'ஐந்து பேரறிவும்,' 'சென்ற காலத்தின்' என்ற தொடக்கத்த பாடல்கள் என்றும் மக்களின் மனத்தை விட்டகலாத மாட்சியுடையவை. வேடர் வாழ்க்கை, நால்வகை நிலவர்ணனை, சாமுத்திரிகாலட்சணம், ஆயுதப்பயிற்சி, வழிபாட்டு முறை என்னும் பலவற்றைப்பற்றி அவருடைய நூலில் காணலாம். எந்தெந்த கண்கொண்டு நோக்கினாலும் அந்தந்த கண்களுக்குச் சில உண்மைகள் தோன்றும்.

குன்றையடிகள் திருவருள் துணைகொண்டு நூலை எழுதியதோடு, தாம் நேரே கண்ணால் பார்த்தது, காதால் கேட்டது இவைகளை ஆராய்ந்தறிந்த வரையில் மாத்திரம் தான் எழுதினார். அதனாலேயே நாயன்மார்களின் புராணப் பாடல்களில் எண்ணிக்கை ஏறத்தாழ இருக்கிறது.

திருநாவுக்கரசர் புராணத்தை 'அடியனேன் ஆதரவால் ஆண்ட அரசில் சரிதப் படியை யான் அறிந்தபடி பகர்ந்தேன்' என்றும், திருஞானசம்பந்தர் புராணத்தில், 'அருந்தமிழாகரர் சரிதை அடியேனுக்கவர் பாதம் தரும்பரிசால் அறிந்தபடி துதி செய்தேன்' என்றும், 'நரசிங்கமுனையர்திறம் நாம் அறிந்தபடி யுரைப்பாம்' என்றும் கூறியிருக்கிறார்.

திருத்தொண்டர்கள் வல்வினையாளர்கள்; அதி தீவிரபக்குவிகள்; சில குறிக்கோள்களையும், கொள்கைகளையும் உடையவர்கள்; எவ்விதமான கடுஞ்சோதனைவரினும் பின்னிடையாதவர்கள்; உலகப் பொருள்கள் கடவுளின் உடமை, நாம் அவருக்கு அடிமை என்பதைக் காட்டியவர்கள். இவர்களின் வரலாறுகளையே சேக்கிழார் பெருமான் நமக்கு அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார். அவருடைய திருத்தொண்டர் புராணம் ஒரு இலக்கிய ஊற்று, காவியச்சோலை, ஓவியச்சாலை, வரலாற்றுக் கருவூலம், அன்புக்கடல், பக்திப் பெருவெள்ளம், கற்பனைக்களஞ்சியம், பல்கலைக்கூடம் என்று இன்னும் பலவாறெல்லாம் போற்றிப்புகழலாம்.

சேக்கிழார் பெருமான் திருவடிவாழ்க !

---

**சீர்காழி** :...பிரமபுரீசுவரசுவாமி கோயிலில் பிரமோற்சவம் 20—4—61 முதல் 2—5—61 வரை நடைபெற்றது.

✦ ✦ ✦ ✦

**இலஞ்சி** :—குமாரசுவாமி கோயிலில் சித்திரை பெருந்திருவிழா 20-4-61 முதல் 29-4-61 வரை நடைபெற்றது.

✦ ✦ ✦ ✦

**சென்னை** :—கந்தகோட்டம் ஸ்ரீ கந்தசுவாமி கோயில் வசந்தோற்சவம் 20-5-61 முதல் 7-6-61 வரை நடைபெறும். இது காலை தினம் மாலை 6 மணிமுதல் இரவு 8 மணி வரையில் பிரம்மஸ்ரீ கல்லிடைக்குறிச்சி திரு. கே. எஸ். இராமகிருஷ்ணசாஸ்திரிகள் அவர்களால் 'ஸ்கந்த புராணம்' சொற்பொழிவு நடைபெறும்.

✦ ✦ ✦ ✦

**மாயூரம்** :—மாயூரநாதசுவாமி கோயிலில் நடந்த அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகத்தையொட்டி 26-4-61 முதல் 28-4-61 வரை சமயச்சொற்பொழிவுகளும் இன்னிசையரங்குகளும் நடைபெற்றன.

 

# செய்திகள்



கரூர் ;—அபயப்ரதான ரங்கனாதசுவாமி கோயிலில் சித்திரை பிரம்மோற்சவம் 20-4-61 முதல் 1-5-61 வரை நடைபெற்றது.

திருவிடவெந்தை :—ஸ்ரீநித்தியகல்யாணசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 28-4-61 முதல் தொடங்கி 8-5-61 முடிய 10 நாள் நடைபெறும்.

பிட்சாண்டார்கோயில் :—புருஷோத்தமப்பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம் 21-4-61 முதல் 2-5-61 வரை நடைபெற்றது.

சோழவில்லி ;—கைலாயநாதசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 20-4-61 முதல் 26-4-61 வரை நடைபெற்றது.

திருப்பனந்தாள் :—அருணஜடேசுவரசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 20-4-61 முதல் 29-4-61 முடிய நடைபெற்றது.

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை :—ஆதிபுரீசுவரர் கோயிலில் பிரம்மோற்சவம் 20-4-61 முதல் 5-5-61 வரை நடைபெறும்.

பரமக்குடி :—சந்திரசேகரசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 18-4-61 முதல் 30-4-61 முடிய நடைபெற்றது. சுந்தரராஜப்பெருமாள் கோயிலில் கோடைத்திருவிழா 25-4-61ல் தொடங்கி 6-5-61 முடிய நடைபெறும்.

கல்கத்தா :—கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்க அரங்கிலே கம்பன் திருவிழா 29-4-61 முதல் 1-5-61 முடிய சொற்பொழிவுகளும் இன்னிசையரங்குகளும் சிறப்புற நடைபெற்றன.

தேரழுந்தூர் :—ஆமருவிப்பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம் 27-5-61 முதல் 5-6-61 வரை நடைபெறும்.

தாமரங்கோட்டை :—கண்டேசுவரசுவாமி கோயில் ஜீர்ண உத்தாரண அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 3-5-61 முதல் 7-5-61 வரை நடைபெறும்.

குன்றத்தூர் :—சேக்கிழார் சுவாமிகளின் திரு நட்சத்திரத்தையொட்டி சேக்கிழார் திருப்பணிக் கழகத்தின் ஆதரவில் 11-5-61 முதல் 20-5-61 வரை சமயச்சொற்பொழிவுகளும், தேவார இன்னிசையரங்குகளும் நடைபெறும். சேக்கிழார் திரு நட்சத்திரமான வைகாசி பூசத்தன்று 20-5-61ல் சேக்கிழார் திருப்பணிக் கழகத்தின் இருபதாம் ஆண்டு விழா நிகழும். அறநிலையத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B.A.B.L. அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

திரு. D. இராமலிங்க ரெட்டியார் M.A.B.L. அவர்கள் சென்னை அறநிலையத்துறை துணை ஆணையராகப் பதவியேற்றார்.

# சிவப்பிரகாச சுவாமிகள்

## அருளிச் செய்த

# நால்வர் நான்மணி மாலை

## (சிதம்பரம் - ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள் உரை)

—:*:—

உ

*கணபதி துணை*

*திருச்சிற்றம்பலம்*

சைவர் சமயாசாரியர்களாகிய

**நால்வர் நான்மணிமாலை**

**விருத்தியுரை**

செந்தமிழ்த்திருநாட்டிலே தெய்வத் திருவருளுருவாய்த் தோன்றித் தக்கார்க்கும் தகார்க்கும் சைவ நெறிபாலித்துச் சன்மார்க்கமுடையராக்கிய சைவசமய குரவர்களின் அற்புத மகிமைகளை அனைவருமுணரத் தெள்ளிய தமிழ்ச்செய்யுளிற் செவ்விதிற்றெருட்டித் துதிப்பான்றொடங்கிய இவ்வாசிரியர் சாக்கிரத்தே நிருமல துரியாதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிதுமெய்தாமை அறிந்தாராயினும் ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும் மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும் முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகரை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்.

**எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை**
**கைப்போ தகத்தின் கழல்.**

(இ-ள்.) கைப்போதகத்தின் கழல்-துதிக்கையையுடைய யானைமுகக் கடவுளின் துணையடிகளை, எப்போதகத்தும் நினைவார்க்கு இடர் இல்லை-எக்காலத்தினுள்ளும் இடையறாதுதியானிப்பார்க்குப் பிறவித்துன்பமில்லை, என்றவாறு.

வாழ்த்தல் வணங்கல் பொருளியல் புரைத்தலென்னும் மூவகை வாழ்த்துள் இது பொருளியல் புரைத்ததென்பது. நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் உண்ணல் உவத்தல் முதலிய காலமனைத்தினுள்ளுமென்பார் எஞ்சாமைப்பொருள்பட எப்போதகத்துமென்றார். அகம் ஏழனுருபுமாம். உம்மை முற்றும்மை. எப்போதும் அகத்து நினைவார்க்கிடரில்லையென உம்மை பிரித்துக்கூட்டி உரைப்பினும் அமையும். விலங்கினுள் யாளியும் அஸ்தமுடைத்தேனும் அஸ்தியெனப்புகழப்படுவதுயானையொன்றேயாகலின் அச்சிறப்புத் தோன்றக் கைப்போதகமென விதந்தார்; அது, நினைவார்க்கிடரில்லை யென்னுங் குறிப்பான் யானை முகக்கடவுளை ஈண்டுணர்த்திற்று. கழலென்னும் சாதியொருமை இரண்டனுருபு ஈற்றிற்றொக்கு நின்றது; [1]"ஐயுங் கண்ணுமல்லாப் பொருள் வயின்-மெய்யுருபு தொகா விறுதியான" என்பதோத்தாகலின். முக்கரணங்களுள் மனம் சிறத்தலின் நினைவார்க்கிடரில்லையென மனத்தின்மேல் வைத்துக் கூறினுரேனும், வாக்காற்றுதிப்பார்க்கும் காயத்தால் வழிபடுவர்க்கும் இடரில்லையென்பதூஉம் இனம்பற்றிக் கொள்க.

இனி, அணுகக்கிடந்த துன்பங்கள் அண்ணலருட்பார்வையான் இடைவிடாத்தியானமுதிர்ச்சியுடையாரை அணுகமாட்டாமையானும் வேறுபற்றுக்கோடின்மையானும் விளக்கின்முன் இருள்போற்கெடுதலும், அவர்மாட்டு அவ்வருள் நிலைபெறுதலான் அத்தியானமுதிர்ச்சி முன்னர்க் காமவெகுளிமயக்கமென்னு முக்குற்றங்களும் காட்டுத்தீமுன் பஞ்சுத் [2]துய்போலழிதலின் அவைகாரணமாக இருவினைகளை இயற்றுமைபற்றி மேல்வரக்கடவதுன்பங்களிலவாதலும் உண்மையே; இங்ஙனம் முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்

1. தொல்காப்பியம்-சொல்லதிகாரம்.
2. துய்-நூற்கும்பஞ்சிற்றொடர்நுனி,

தார்க்கு எடுத்தவுடம்பும் அதுமுகந்துள்ள வினைப்பயன்களாகிய பிராரத்தமுமிருத்தலின் இடரில்லையென்ப தெங்ஙனம் பிறவெனின், - பிராரத்தமிருத்தலான் ஒரோவழி வேதனைபற்றி துறக்கப்பட்ட புலன் கண்மேற் பழைய பயிற்சிவயத்தால் நினைவு செல்லும்: அங்ஙனஞ் செல்லுதலான் இடருண்டாமேனும் கைப்போதகத்தின் கழல்களை இடைவிடாதுபாவித்தலான் அவாவறுதலின் அதுகாரணமாக வரும் இடரு மொழிதல்பற்றி இல்லையென்றாரென்க.

அணுகக்கிடந்த துன்பமாவன-பிறவி அநாதியாய்வருதலின் உயிரால் எல்லையின்றியீட்டப்பட்ட வினைப்பயன்களுள் இறந்தவுடம்புகளான் நுகர்ந்தனவும் பிறந்தவுடம்பான் முகந்து நின்றனவு மொழியப் பின்னும் அநுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன: இவற்றைச் சஞ்சிதமென்ப. வரக்கடவதுன்பங்களாவன - காமவெகுளி மயக்கங்காரணமாக இயற்றப்படும் இருவினைகளான் எய்தற்பாலன: இவற்றை ஆகாமிய மென்க.

எனவே, மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணங்களான் ஈட்டப்படும் இருவினைகளும் ஈட்டப்படுங்காற் றூலகன்மமாரு ஆகாமியமெனவும், பின்னர்ப் பக்குவமாங்காறும் சூக்குமகன்மமாய்ச் சஞ்சிதமெனவும், பயன்படுங்கால் ஆதிபௌதிகம் ஆத்தியான்மிகம் ஆதிதைவிகமென்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தமெனவும் பெயர்பெறுமென்பதூஉம், அவற்றுள், ஆகாமிய சஞ்சிதங்கள் அண்ணலருளான் இல்லையாகப் பிராரத்தமொன்றும் அநுபவித்தொழிக்கற்பாலதென்பதூஉம், அதுவும், இடைவிடாப் பாவனையான் அவாவறுதலின் வாதிப்பதன்றென்பதூஉம், வாதித்தலறவே, கைப்போதகத்தின் கழல்களையெய்தி என்றுமொருபெற்றித்தாய நிரதிசயவின்பம் பெற்றுவாழ்தல் ஒருதலையென்பதூஉங் கருத்தாகக் கொள்க. ஆதிபௌதிகமாவது-சடம் வாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது - சடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவது. ஆதிதைவிகமாவது - ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவது.

சஞ்சிதாகாமியங்கள் அண்ணலருளானகலுதலை [1]"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள் - முன்னைவினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்-பின்னை வினையைப்பிடித் துப் பிசைவர்கள்-சென்னியில் வைத்த சிவனரு ளாலே" என்பதனானும், ஆதிபௌதிகமுதலியவற்றை "பனியா லிடியாற் படர்வா டையினுந் - துனிதென்றலினுஞ் சுகமுந் - தனையனைய-நீரினு மின்பின் னலுநெருப்பினுந்துயரின் - போரிற் பவுதிகமாகும். தன்னாற் பிறரால் றனக்கு வருந் தீங்குநல - மின்னு விலங்கரவந்தேளெறும்பு - சென்முதனீ-ரட்டையல வன்முதலை மீனரவ மாதியினுங்-கட்ட முமிங் கான்மிகமே காண். கருவிற் றுயர்சனிக்குங் காலைத் துயர்மெய் - திரைநரை மூப் பிற்றினைத்துச் செத்து - நரகத்தி-னுழுந் துயர்புவியை யாளின்ப மாதியெலாமுழுதவு தைவிகமென் றோர்." என்பதனானும், எப்போதும் நினைத்தல் வேண்டுமென்பதனை [2]"நின்று மிருந்துங் கிடந்து நடந்து நினை-யென்றுஞ் சிவன்றாளிணை" என்பதனும், இடைவிடாப் பாவனையான் அவாவறுதலை [3]"தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது-வாஅய்மை வேண்ட வரும்," என்பதனானும், மூவகைத்துன்பமும் இலவாதலை [4]"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் கியாண்டுமிடும்பை யில," என்பதனானும் அறிக.

[5]"என்னரேயாயினும் யாவதொன்றெண்ணுதன்-முன்னரேயுனதுதாண்முடியுறப் பணிவரே-லன்னர்தஞ் சிந்தைபோலாக்குதி யலதுனை - யுன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ," எனச் சிவபிரானருளியவாறு வழிபடுவார்க்கு விக்கினங்களையகற்றியும் வழிபடார்க்கு அவற்றையாக்கியும் விக்கினேசுரரெனத் திருநாமம்பெற்று விளங்கலின் இக்கடவுள் வாழ்த்து முன்னர்க்கூறுவது முறைமையாதலுணர்க.

1. திருமந்திரம் ஞானிசெயல். ௨.
2. வருத்தமறவுய்யும்வழி. கரு.
3. திருக்குறள். ௩௬௪.
4. ௸ ௪
5. கந்தபுராணம் கயமுகனுற்பத்திப்படலம் கரு௨.

பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் றண்டை
வெறித்தண் கமலமே வீடு.

(இ-ள்.) பூவான் மணி நீர் மலி பொய்கை கரையின்-(சீகாழித் திருப்பதியிலே) செந்தாமரை மலர்களோடு முத்துக்களும் நீரும்செறிந்த பிரமதீர்த்தக்கரையிலே, (பிராட்டியாரருளிய) - இயல் பாவால் மொழி ஞானப்பால் உண்டு- இயற்பாவாற்றுதிக்கப்படும் ஞானப்பாலை இனிதருந்தி, - நாவால் மறித்து-அதனை நாவினாலே தடுத்து,-எம் செவி அமுதாய் (இயற்பாவால்) வார்த்தபிரான் - எங்களுடைய செவியமுதமாக இயற்பாவினாலொழுக்கிய ஆளுடையபிள்ளையாரது,- தண்டை வெறி தண் கமலமே வீடு-தண்டையும் நறுமணமும் தண்மையும்வாய்ந்த செந்தாமரைமலர்போலும் திருவடிகளே எமக்குப் புகலிடம், (எ-று).

இவ்வாளுடைய பிள்ளையார் அம்மே அப்பாவென்றழுது ஞானப்பால் பெற்றது தம்பசிதீர்தற்பொருட்டன்றித் தரணியில் வேதநெறி முதலிய விர்த்தித்தற்கேயாகலின் அதனையுட்கொள்ளாது சொல்லுருவாய்த்திரள நாவினாற்றிரட்டினரென்பார், 'நாவான்மறித்து,' என்றும், பாலின் செறிவு அமுதமேயாகலின் ஞானப்பாலின் றிரள்வாகிய தோடுடையசெவியன் முதலிய சொரூபவிலக்கண வாக்கியங்களை அமுதென்பார், அவை செவியானுகரப்படும் சுருதியாய் நுகர்ந்தார்க்கு மிர்தத்தை நீக்கி நிரதிசயவின்பம் பயத்தலின், 'செவியமுது,' என்றும், இவர் முருகக்கடவுளவதாரமெனப் பல புராணங்களும் அருணகிரிநாதர், நம்பியாண்டார் நம்பிகள் முதலிய ஆன்றோர் துதிகளும் பெரிதுமுழக்கலின் எவரினும் தலைமைபெற்றவரென்பார், 'பிரான்,' என்றும், எவர்க்கும் சென்மவெப்பகலத் தெய்வமணங்கான்று திகழ்ந்து குளிர் செய்வவென்பார், திருவடிகளைக் 'கமலம்,' என்றும் இவை எளிதிற் சிவப்பேறளிப்பனவென்பார், காரணத்தைக் காரியமாகவுபசரித்துக் கமலமேவீடு, என்றும் கூறினர்.

இப்பிரபந்தம் அந்தாதித்தொடராகலின் ஆதியில் மங்கலமாகத் தொடங்கிய பூவெனப்படுவது அந்தத்திற்கூறிய பொறிவாழ்பூவேயாம். ஆனுருபு உடனிகழ்ச்சிக்கண் வந்தது: [1]"அறத்தான் வருவதேயின்பம்" என்புழிப்போல. சலசம் தலசமென்னும் இருவகை முத்தினுள் ஈண்டுக் கூறியவை சலசம். சலசமாவன-தாமரை, இப்பி சங்குமுதலியவற்றிற் சலசம்பத்தத் துதிப்பன. தலசமாவன-கரும்பு மூங்கில் கமுகு முதலியவற்றிற் றலசம்பந்தத் துதிப்பன. பூவான்மலிந்தமணி யெனினும் பொருந்தும். மொழியப்படுவெனற்பாலது செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படுவிகுதிதொக்கு மொழியென நின்றது. இவ்வாறு வருவனவற்றை வடநூலார் நயக்கு என்பர். அல்லதூஉம், இப்பிள்ளையாரருளியது [2]"எல்லையிலா மறை முதன்மையுடனெடுத்த எழுதுமறை" ஆகலின், மொழியென்பதனை ஏதுப்பொருள் விரியநின்ற வினைத்தொகையாக்கி, வேதார்த்தமென்பதனை அவாய்நிலையான் வருவித்து, வேதார்த்தங்களை இயற்பாவான் மொழிதற்கேதுவாகும் ஞானப்பாலெனப் பொருள்கொள்ளலும் ஒன்று. ஞானப்பால் - ஞானமயமாகிய பால்.

ஞானமாவது-பதிபசுபாசங்களை உள்ளவாறுணரும் உண்மையுணர்ச்சி. அது,அபரம் பரமென இருதிறப்படும். அபரமாவது-வேதாகமங்களின் ஆராய்ச்சியுணர்வு. பரமாவது-அதனாற் பெறப்படும் அநுபவவுணர்வு. அற்றேல், சிவஞான சித்தியினும் சிவஞானதீபத்தினும் முறையே, "கேட்டலுடன் சிந்தித்த றெளிதனிட்டை கிளர்த்துலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்" எனவும், "தெரிவரிய ஞானமு நாலாகுங் கேட்டல்-சிந்தித்த றெளிதலுயர் நிட்டையென்றே" எனவும், ஞானம் நான்கென நவில்வதென்னையெனின்-அபரம் கேட்டல் சிந்தித்தல்களாற் பெறப்படுவதூஉம், பரம் தெளிதல் நிட்டைகூடல்களாற் பெறப்படுவதூஉம் ஆகலின் என்க.

மறித்தல் திரள்வித்தலின்மேற்று. எம் என்றது இத்தமிழ்வேத சிரவணஞ் செய்வோரனைவரையும் உளப்படுத்தி நின்றது.

---

1. திருக்குறள் ௩௯.
2. பெரியபுராணத்தில் சம்பந்தமூர்த்திகள் புராணம், ௭௦.

அஞ்செவியென்பது பாடமேல், பிள்ளையார் தம் பாடல் பரமர்பாற் செல்லுமுறையாகத் திருச்செவியைச் சிறப்பித்துப் பாடினராகலின் அப்பரமர் அகஞ்செவி நுகரமுதாகவென்க. பிறர் அகஞ்செவியுமாம். அமுது அமிர்தமென்பதன் மரூஉ. ஆய் செயவெனெச்சத்திரிபு. ஞானப்பாலை அவர் நுகர்தற்குப் பொன் வள்ளம் கருவியாதல்போல, அதனை அமுதாகப் பிறர் நுகர்தற்கு இயற்பா கருவியாயினமையின் இயற்பாவாயெலன்பது வார்த்த வென்புழியுங் கூட்டப்பட்டது. வாயமுதைச் செவியமுதாக வார்த்தமை அக்கியதாகர்த்திருத்துவம். இதனியல்வு முன்னர் விரிக்கப்படும். தண்டையுடைய கமலமெனவும் இரட்டுற மொழிதற் பொருள்பயக்கும் உடையவனென்னுஞ் சொல் எஞ்சிற்று. ஏகாரம் தேற்றம். வீடு- விடுதல்: அது பந்தநிவர்த்தி: விடுதலையானடையப்படும் சிவப்பேற்றை வீடென்றுபசரித்தார்.

[1]"ஞானம் இருவகையாதலை இயம்பிய ஞானமோ ரிருவகைப்படும்-பயன்றருமபரமும் பரமு மென்னவே-நயக்தரு கலைகளே யபர ஞானமா-முயர்ந்திடு பரஞ்சொலி னுணர்வென் றோதுவார்", என்பதனுனும், இறைவி தனப்பால் இயற்பாவாற்றுதி பெற்றமையை" [2]"முத்தமுலை செப்புவதெனக்களிறு பிற்குமரன் முற்புதல்வர் துய்த்த வமுதா-லத்தலைமை பெற்றனர திற்றிவலை கிட்டினுமெ னற்பவுயிர் முத்தி பெறுமே. தருணமங்கலை யுனதுசிந்தை தழைந்த பாலமுதூறிஞ-லருணகொங்கை யிலது பெருங்கவி யலைநெடுங்கடலாகுமே-வருணநன்குறு கவுணியன்சிறு மதலையம் புயல் பருகியே-பொருணயம்பெறு கவிதை யென்ரெரு புனிதமாரி பொழிந்ததே," என்பதனுனும், வேத முதலிய விர்த்தித் தற்கே அழுதமையை" [3]"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்-பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத-சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்-பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்," என்பதனுனும், சொருப விலக்கணங்களை [1]"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்-காடுடைய சுடலைப்பொடி பூசி யென்னுள்ளங் கவர்கள்வ, னேடுடையமலரான்முனநாட் பணிந்தேத்தவருள் செய்த பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே," என்பதனுனும், சிவப்பேறு எளிதினளித்தலை [2]"முத்தன வெண்ணகை யார்மயன் மாற்றி முறைவழுவா-தெத்தனைகால நின்றேத்து மவரினு மென் பணிந்த-பித்தனை யெங்கள் பிரானை யணைய தெளிது கண்டீரத்தனை ஞானசம்பந்தனைப் பாதமடைந்தவர்க்கே," என்பதனுனும் அறிக. (1)

**வீட்டிற்கு வாயி லெனுந்தொடை**
**சாத்துசொல் வேந்தபொது**
**வாட்டிற்கு வல்ல னொருவற்கு**
**ஞான வமுதுதவி**
**நாட்டிற் கிலாத குடர்நோய்**
**நினக்குமுன் னல்கினுமென்**
**பாட்டிற்கு நீயு மவனுமொப்**
**பிரெப் படியினுமே.**

**(இ - ள்.)** வீட்டிற்கு வாயில் எனும் தொடை சாத்து சொல்வேந்த-முத்தியை யடைதற்கு ஏதுவென்றுயர்த்தி மொழியப்படும் தேவாரங்களைச் சிவபிரானுக்கணிந்த திருநாவுக்கரசு தேவரே! பொது ஆட்டிற்கு வல்லன்-பொதுவிலே நடனம் புரிதலில் வல்ல பெருமான்—ஒருவற்கு (நாட்டிற்கு இலாத) ஞானவமுது உதவி ஆளுடைய பிள்ளையார்க்கு அவனியிலில்லாததொரு அரிய ஞானப்பாலையளித்து-நினக்கு நாட்டிற்கு இலாத குடர்நோய் முன் நல்கினும்-உமக்கு உலகிலில்லாததொரு கொடிய குடர்நோயை முற்கொடுப்பினும், பாட்டிற்கு நீயும் அவனும் எப்படியினும் ஒப்பீர்-திருப்பாடலில் தேவரீரும் அவரும் எவ்விதத்திலும் இணையாவிராகலின், என்-இங்ஙனம் ஈந்தமை யாற் குறைவு யாது? (எ - று.)

இவ்வாசிரியர் [3]"நில்லாத வுலகியல்பு கண்டு நிலை யாவாழ்க்கையல்லேனென் றறத்துறந்துஞ் சமயங்களானவற்றி-னற்லாறு தெரிந்துணர நம்பரருளாமையினுல்-

1. சதமணிமாலை சாயம்பு சூத்திரப்பொருள் ௬
2. சௌந்தரியலகரி. ௭௧-௭௪
3. ஷை புராணத்தில் ஷை ௧.

1. தேவாரம் திருப்பிரமபுரம்.
2. திருஞானசம்பந்தர் திருவந்தாதி ௯௦.
3. ஷை புராணத்தில் வாகீச மூர்த்தி புராணம் ௬௭.

கொல்லாமை மறைந்துறைபு மமண் சமயங்குறுகினர்." ஆகலின், இங்ஙனமே மற்றைச் சமயங்களிற்புக்கு இடர்ப்படாது தாம் பெற்றவேறு உலகமெல்லாம் பெறுவான் அவ்வச் சமயங்களினிழிபையும் சைவசமயத்தின் உயர்வையும் ஆங்காங்கு உள்ளவாறுணர்த்தி வைத்தருளினராகலின், இவரருளிய தேவாரம் ஒவ்வொன்றும் வீட்டுநெறிக் கேதுவாயிற்றென்பார், 'வீட்டிற்கு வாயிலெனுந்தொடை' என்றும், இயக்கினன்றி ஆன்மாக்களுக்குத் தாமே இயங்குவதின்மையின் ஆடுவார் போன்று பொது நிலையினின்று அவற்றை ஆட்டுவிப்பவனென்பார், 'பொதுவாட்டிற்கு வல்லன்' என்றும், இக்குடர்நோய் கடுங்கனல்போல் அடுங்கொடிய தென்பார், 'நாட்டிற்கிலாத குடர்நோய்,' என்றும், பொதுவிலிருந்தும் எல்லாம் வல்ல தாம் வேறு இனியவகையின் ஆட்கொளலின்றிக் குடர்நோய் நல்கினரேனும், நீவிரிருவிரும் பாடலிலொத்தலின் அந்நல்கலான் அணுத்துணையும் குறைவணுகிற்றில்லை யென்பார், 'நல்கினுமென்' என்றும் கூறினர்.

அற்றேல், சங்கரரென்பார் இங்ஙனம் குடர்நோய் நல்கியது தறுகண்மையன்றோவெனின்,-அறியாது வினயினய்: [1]"தந்தை தாய் பெற்ற தத்தம் புதல்வர்கடஞ்சொலாற்றின்-வந்திடாவிடி லுருக்கி வளாரினலடித்துத் தீய-பந்தமுமிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவேயாகு-மிந்தநீர் முறைமையன்றோ வீசனர் முனிவுமென்றும்," என்றபடி, இவர் சமண்சமயப்படுகுழியினின்றும் விரைந்து மீளுதற்கே விடுத்தமையின் இதுவும் அருட்பெருக்கே யாமென்க.

திருமறைக் காட்டிலே, [2]"இரக்கமொன்றிலீர் சரக்கவிக்க தவந்திறப் பிம்மின்" எனப் பெரிதும் பெருமானைப் பிரார்த்தித்த வழி, இச்சொல் வேந்தருக்குப் பத்தாவது பாட்டிற் கதவுதிறத்தலும் ஞானசம்பந்தருக்கு முதற்பாட்டிற்றானே கதவடைத்தலும் நிகழ்ந்திருக்கப்பாடலிலிணை கூறியது மலைவாம்பிறவெனின், திருவீழிமிழலையில் சம்பந்தமூர்த்திகளுக்கு வாசிபடுங்காசும் இவ்வாகீசமூர்த்திகளுக்கு வாசியிலாக்காசும் நல்கி, அவரை வாசிதீரப் பாடுவித்து, இவர் பெருமையை விளக்கியாங்கு திருமறைக் காட்டிலே எடுத்த திருப்பாட்டிற் கதவடைப்பித்தன்றித், திருவாய்மூரிலும் அவர்க்கு முன்னரும் இவர்க்குப் பின்னருமாகத் தரிசனம் தந்தளித்து அவர் பெருமையை விளக்கினமையின், மலைவு யாண்டையதென்க.

அற்றேல், இவர் பெருமையைத் தெருட்டுதற்குக் கைத்தொண்டு ஏதுவானாற்போல், அவர் பெருமையைத் தெருட்டுதற்கு ஏதுவென்னையெனின்-கதவு திறக்கப் பாடுவீரென அவரருளுங்கால் நீரே பாடியருளல் வேண்டுமென்றது, இவர் தாம் முற்பட்டமையேபோலும்; இது, [1]"நம்பர் திருவுள்ளமறியா தயர்ந்தேன்" எனவும், "பிழைத்துச் செவ்வியறியாதே திறப்பித்தேன்" எனவும், இச்சொல்வேந்தர் கவலுதலாற் கொள்ளக் கிடப்பதுணர்க. சேக்கிழார் பெருமானும் இறைவர் திருக்காப்பு நீக்கத்தாழ்த்தது பாடற் சிறப்பின்மையாலன்றென்பார், "பயன்றுய்ப்பான்" என விளக்கியருளினராகலின் அவ்வக் காலங்களுக்கியைய, நிமலர் திருவுளப் பாங்கின்படி நிகழும் இத்தகைய நிலைமைகளைப்பற்றியாம் சிற்றறிவாற் பேதித்து முரணுதற்குரியரல்லே மாகலின் விடுக்க.

வாயில்-ஏது. துதிபெறு நால்வகைச் சொன்மலர் பத்தியிற்பதிய எண்சுவைத் தேன் பரவ அணிவாய்ப்பத் திக்குமுழுமையுஞ் சிவமணங்கமழ்தரத் தொக்கவன்பெனுநாரிற் றெடுக்கப்படுவதாகலின் தொகை யெனப்பட்டது. துதித்தலைத் தொடையென்பதற்கிணங்கச் சாத்துதலென்றுபசரித்தார். ஆடுவது-ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களை மாயையாகிய முதற்காரணத்தினின்றும் தோற்றுவிப்பதும், அவற்றை நிலைபெறுவிப்பதும், அவற்றை முதற்காரணத்திறெடுக்குவதும், ஆன்மாக்களை இருவினைப்பயன்களாகிய போக்கியப் பொருள்களின் அமிழ்த்துவதும், அவ்வான்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை

1. சிவஞானசித்தி இரண்டாஞ் சூத்திரம் கசு.
2. தேவாரம் திருமறைக்காடு.

1. ஷை புராணத்தில் ஷை-உஎ௯. உ௪0-உ௮௮.

விளக்குவதுமாகிய பஞ்சகிர்த்திய நடனமாம். இவ்வைந்தனுள், முன்னைய மூன்றும் உடலினும் ஏனையவை உயிரினும் இயற்றப்படுவன. நாட்டிற்கிலாதவென்பது தாப்பிசையாய் அமுதினும் நோயினும் இயைந்தது. நல்கினுமென்பதின் உம்மை இழிவு சிறப்பு. எவனென்பது என்னென மரீஇயிற்று. ஆட்டிற்கு நாட்டிற்கு பாட்டிற்கு என்பன வேற்றுமை மயக்கம். இறைவரிங்ஙன நல்கினும், இருவரையும் வழிபட்டுய்தற்குரிய என் தகுதிக்கு நீவிரிருவிரும் எவ்விதத்தும் நிகராவீரென்னலும் ஒன்று. பாடு-தகுதி. என் துதிக்கென்பாருமுளர்; அஃது பொருட்சிறவாமையுணர்க. இது ஆட்கொண்ட முறைமையிற் பேதங் கற்பிப்பார்போன்று இருவர் பாடலுக்குமுள்ள அபேதத் தன்மையைப் புலப்படுத்தியபடி.

தொடை வீட்டிற்குவாயிலாதலை [1]"புலனொடாடித் திரிமனத்தவர் பொறி செய்காமத் துரிசடக்கிய - புனிதநேசத் தொடுதமக்கையர் புணர்வினாலுற் றுரைசெயக்குடல் - சுலவுசூலைப் பிணிகொடுத் தொளிர் சுடுவெணீறிட் டமணகற்றிய-துணைவினான்முப் புரமெரித்தவர் சுழலிலே பட் டிடுதவத்தின-ருலகின்மாயப் பிறவியைத் தருமுணர்விலாவப் பெருமயக்கினை-யொழியவாய்மைக் கவிதையிற் பல வுபரியாகப் பொருள்பரப்பிய-வலகின்ஞானக் கடலிடைப்படுமமிர்தயோகச் சிவவொளிப் புக-வடியரோமுக் கருளினைச் செயுமரைய தேவத் திருவடிக்களே," என்பதனானும், இயக்கினன்றி இயங்குதற்றன்மையின்மையை [2]"என்னை யேது மறிந்தில னெம்பிரான் றன்னை நானுமுன் னேது மறிந்திலே-னென்னைத் தன்னடி யானென்றறிதலுந்-தன்னை நானும் பிரானென் றறிந்தனே" என்பதனானும், பஞ்சகிர்த்திய நிலைமையை [3]"ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட்டாக வியம்புவர் களணுக் களிடர்க் கடனின்று மெடுத்தே-யூற்றமிக வருள்புரித லேதுவாக வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன்மற்றைத்-தோற்றமலபாகம்வரக் காத்தல் போகந் துய்ப்பித்த றிரோதாயி நிறுத்த லாகும்-போற்றலரு மருளருளே யன்றி மற்றுப் புகன்றவையு மருளொழியப் புகலொணாதே," என்பதனானும் அறிக. (2)

படியிலா நின்பாட்டி லாரூர
நனிவிருப்பன் பரம னென்ப,
தடியனே னறிந்தனவான் றொழுமீச
னினைத்தடுத்தாட்கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பா
னினக்காகத் தூது சென்று
மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு
முழன்றமையால் விளங்கு மாறே.

(இ - ள்.) ஆரூர - நம்பியாரூரவள்ளலே!-வான் தொழும் ஈசன் நினை தடுத்து ஆட்கொண்டும்-தேவருமிறைஞ்சுஞ் சிவபெருமான் தேவரீர் திருமணஞ் செயாதபடி தடுத்து அடிமைகொண்டுழன்றமையாலும், - அன்றித் தொடி உலாம் மென்கை மடமாதர்பால் நினக்கு ஆக தூது சென்றும்-அதன்றியும், வளைகள் சஞ்சரிக்கும் மெல்லிய கரங்களையும் மடமையையுமுடைய பரவை நாச்சியாரும் சங்கிலிநாச்சியாரும் பரிந்து உடன்படத்தேவரீர் பொருட்டுத் தூதுநடந்துழன்றமையாலும்,-மிடி இலா மனைகடொறும் இரந்து இட்டு உழன்றமையாலும் - வறுமையில்லாத வீடுகடோறும் அன்னமேற்று அமுதளித்துழன்றமையாலும்,-நின்படி இலாப் பாட்டில் பரமன் நனிவிருப்பன் என்பது-தேவரீரருளும் நிகரற்றதிருப்பாட்டில் அப்பெருமான் அதிக நேசமுடையரென்பதை - அடியனேன் விளங்குமாறு அறிந்தனன் - அடியேன் விளங்கும்படி ஆய்ந்தறிந்தேன், (எ-று.)

இந்நம்பியாரூரர் மற்றைத்தொண்டர் போலாது தொண்டோடு தோழமையுமுடையராகலின் அவ்வுரிமைபற்றி, பத்திரசமேயன்றி ஏனைச் சிங்காரமுதலியரசங்களும் இவர் திருப்பாட்டில் மிக்குக் குடிகொண்டனவென்பார், 'படியிலாப்பாட்டு' என்றும், வரம்பிலின்பமுடைமையின் ஒன்றினும் வாஞ்சையில்லாத அண்ணலார் நரைதிரை மூப்புமிக்க அந்தணவுருக்கொண்டு தண்டூன்றித் தளர்நடைவாய்ந்து சரிகோவணவுடையராய்க் கண்டோர் நகைக்கவந்து, புத்தூர்க்கும் திருவெண்

1. திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை க.
2. தேவாரம் தனிதிருக்குறுந்தொகை.
3. சிவப்பிரகாசம் பொது-சு.

ணெய்நல்லூர்க்கு முழன்று, அந்தணரவை முன் வல்வழக்கிட்டுச் சாதித்து அடிமை கொண்டதும், திருவொற்றியூரினும் திருவாரூரினும் நாச்சிமாரிருவரையும் நண்ணுவித்தற்பொருட்டு அலகையுமுறங்கும் அர்த்தராத்திரியில் அடிமலர்சிவக்க ஒரு காலன்றி இரு காற்றூதுழன்றதும், திருக்கச்சூரிலே கடும்பகற்பொழுதில் இடும்பலி வேண்டிச் செல்வர்மனைதொறும் சென்றிரந்தளித்ததும், பாட்டின்விருப்பானன்றிப் பிறிதொன்றானன்றென்பார், 'பாட்டினனிவிருப்பன்' என்றும், இங்ஙனமியற்றியவர் எவர்க்கு முதற்கடவுளென்பார், 'பரமன்' என்றும், பிறர்கூற்றாற் றுணிதற்றன்மையிலனேனும் இவ்வேதுக்களான் ஐயமின்றித் துணிந்தனனென்பார், 'விருப்பனென்பது உழன்றமையால் விளங்குமாறறிந்தனன்' என்றும், ஏவலரின்மையின் வலிந்தாண்டதன்றென்பார், 'வான்றொழும்', என்றும், இவர் திருக்கைலையினின்றும் அவனியிலவதரிக்குங்கால் "செய்ய சேவடி நீங்குஞ்சிறுமையேன் - மையன்மானுடமாய் மயங்கும்வழி - யையனேதடுத்தாண்டருள் செய்யென" வேண்டியாங்கு. ஆட்கொண்டும், தூதுசென்றும், இரந்திட்டும் காத்தமை முதலிய புலப்படுப்பார், 'ஈசன்' என்றும் மற்றை அணிமுதலிய வாய்ப்பினும் மங்கையர்க்குக் கைக்குவளையின்றெனிற் கவினிகழாதென்பார், 'தொடியுலாமென்கை' என்றும், வறியர் மனையிற் செல்லின் இன்னடிசிலும் இனியகறிகளுங் கிட்டாவாகலின் தேடிச் செல்வர்மனைமுற்றும் சென்றிரந்தனரென்பார், 'மிடியிலா மனைகடொறுமிரந்திட்டும்', என்றும் கூறினார்.

படி - நிகர், என்பதெனல் பிறர் கூற்று. இடைச்சொல்லுமாம். வான் இடவாகு பெயர். மடமையாவது - பிறருணர்த்துவதையுட்கொள்வதன்றித் தாமுணர்ந்ததை வெளிவிடாமை. தானே வகுத்துக் கூறுதலும் கூறியது கூறுதலுமாகிய இருவகைத்தூதுள் இத்தூது முந்தியது. உம்மைகள் மூன்றும் என்ணின்கணின்ற உயர்வு சிறப்பு. உழன்றமையாலென்பதனை இறுதி நிலைத்தீபமாக ஆங்காங்குக் கூட்டி உம்மை பிரித்துச் சேர்த்துரைக்கப்பட்டது.

கைவளையின்றெனிற் கவினிகழாதென்பதனை [1]"இரங்குமே கலைசிலம் பன்றியேனைய - விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை - மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனி - னரும்பியமுலையினார்க் கழகுண் டாகுமோ" என்பதனும், வான்றொழுமீசனென விதந்தமையை [2]"தொழுதும் வணங்கியு மாலயன் றேடருஞ் சோதிசென்றுங் - கெழுதுந் தமிழ்ப்பழ வாவணங் காட்டி யெனக்குன் குடி - முழுது மடிமைவந்தாட்செயெனப் பெற் றவன்முரறே - ஞெழுகு மலரினற் றூரெம்பிரானம்பி யாரூரனே" என்பதனும், பாட்டில் விருப்பனென்பதனை [3]"தண்மலரும்பொழிற் றென் கமலேசர்க் குச் சாத்துகின்ற - வொண்மலர் சொன் மலர்க் கொவ்வாது போலுமற் றோர்புலவன் - பண்மலர் சாத்திப் பணிகொண்டவாபச்சை மால்சிவந்த - கண்மலர் சாத்தியுங் காண்பரி தான கழன்மலரே" என்பதனும் அறிக. (3)

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணன்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்க
டொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே.

(இ-ள்.) விளங்கு இழை பகிர்ந்த மெய் - திகழும் ஆபரணங்களையணிந்த உமாதேவியார் செம்பாதியாகக்கொண்ட திருமேனியையும் - முக்கண் உடை காரணன் - சூரியசோமாக்கினிகளென்னும் மூன்று நேத்திரங்களையுமுடைய முதற்கடவுளின் - உரை எனும் ஆரணம் மொழியோ - திருவாக்கெனச் சிறப்பித்துரைக்கும் வேதமோ?-ஆதி சீர் பரவும் வாதவூர் அண்ணல் - அக் கடவுளின் கீர்த்தியைத் துதிக்கும் திருவாதவூர்த்தலை

1. திருவிளையாடல் வளையல்விற்ற படலம் உச.
2. திருத்தொண்டர் திருவந்தாதி-அ.
3. திருவாரூர் நான்மணிமாலை-கூ0.

வரின்-மலர்வாய் பிறந்த வாசகத்தேனே-செங்குமுதமலர் போலும் செவ்விய திருவாயிலுதித்ததிருவாசகமென்னும்தேனே? சிறந்தது யாதோ என்குவீராயின்-மேன்மையுடையது யாதோவென்று வினவுவீரேல்-மன்பதை உலகில்-மக்கட் பரப்புடைய இம்மாநிலத்திலே,-வேதம் (பலகால்) ஓதின் - வேதத்தைப் பலமுறையோதினும் (அதுகேட்டு), விழி நீர் பெருக்கி - கண்களினின்றும் நீரைப் பொழிந்து,-நெஞ்சம் நெக்கு உருகி நிற்பவர் காண்கிலேம்-மனம் கரைந்துருகி நிற்கின்றவரை யாம் கண்டிலம்:-திருவாசகம் ஒருகால் ஓதின்-திருவாசகத்தை ஒருமுறையோதினும்,-கருங்கல் மனமும் கரைந்து உக-கருங்கல்லேயெனப்படும் வன்மனமும் உருகிக்கசிய,-தொடும்மணல் கேணியில் கண்கள் நீர் சுரந்து பாய-தோண்டிய மணற்கேணி சுரக்குமாறுபோலக் கண்கள் நீர் பெருகிச் சுற்றும் பாய,-மெய் மயிர் பொடிப்ப - தேகத்திலுள்ள மயிர்கள் சிலிர்க்க,-விதிர்விதிர்ப்பு எய்தி,-நடுநடுக்கமடைந்து,-அன்பர் ஆகுநர் அன்றி-அன்பராகுபவரல்லது,-மற்றையர் இலர்-அன்பராகார் இலர் (எ-று.)

இறைவியார் தமக்கும் இறைவர்க்குமுள்ள அபேதநிலைமை புலப்பட இறைவரை வழிபட்டு அவர்வாமபாகமுற்றும் ஒற்றித்துநிற்கும் வரம்பெற்றனரென்பார், 'விளங்கிழை பகிர்ந்தமெய்' என்றும், [1]"வியஞ்சகத்தையின்றி விளங்காத சூரிய சோமாக்கினிகளுக்கு வியஞ்சகமாய் விளங்கும் முதற்கடவுளென்பார், 'முக்கட் காரணன்' என்றும், வேதம் தம்வழிநிற்பார்க்கின்பத்தையும்-நில்லார்க்குத் துன்பத்தையும் பயக்கும் ஆஞ்ஞாசத்திருபமாய் விளங்கி, அனைவர்க்கும் விதிவிலக்குக்களையுணர்த்தி, மெய்யுணர்வு கொளுவி, இகபரங்களைத்தருதற்கே இறைவரால் அருளிச் செய்யப்பட்டனவென்பார், 'காரணனுரையெனுமாரண மொழியோ' என்றும், திருவாசகம் சிந்தைக்கினிது செவிக்கினிது வாய்க்கினிதுதென்னும்படி மலர்த்தேனை யொப்பவினித்து எவரையும் சிவானந்தமயமாக்குவதென்பார், 'மலர் வாய்பிறந்த வாசகத்தேனே' என்றும், அன்பைவிளைவித்தலில் ஆரணஞ் சிறந்ததென்பது பூர்வபக்கமும் திருவாசகம் சிறந்ததென்பது சித்தாந்தமுமாமென்பார், அக்குறிப்பமைய முறைப்படுத்து 'ஆரண மொழியோ வாசகத்தேனே யாதோ சிறந்தது' என்றும், வேதமோதின் அதன் மெய்ப்பொருளறிந்தார் சிலர் யாண்டேனும் அரிது உருகி நிற்றலுங்கூடுமேனும் எமக்குப் பிரத்தியக்ஷ மின்றென்பார், 'உருகி நிற்பவர்க்காண்கிலேம்' என்றும், திருவாசகமோதின் அன்பராகுதல் கண்கூடென்பார், 'அன்பராகாரிலர்' என்றும் கூறினர்.

கூறவே, வேதம் ஆண்டவர் திருவாக்கும் திருவாசகம் அவரைத்துதித்த அடியவர் திருவாக்குமாக இருப்பினும், அதனைப் பலகாலோதினும், சிற்றன்புடையார்க்கு நிகழும் விழிநீர்ப்பெருக்கமும் நெஞ்சநெக்குருகலுங்கூட எளிதின் நிகழுதலரிதென்பதூஉம், இதனை ஒருகாலோதினும், பேரன்புடையார்க்கு நிகழும் கருங்கன் மனக்கரைவுமுதலிய உடனிகழ்தல் ஒருவந்தமென்பதூஉம் கருத்தாகக் கொள்க. இரண்டனியல்பையும் உணர்வாரொருவர் கடாவிற்கு விடைநிறுவுவார் - போன்று வேதத்தினும் இத்தமிழ்வேதமாகிய திருவாசகம் எவர்க்கும் எளிதிற் பயன்படுதற்றன்மை விளக்கியவாறு.

உலகில் அன்பராகுநரன்றி ஆகாரிலரென இயையும். விளங்கிழை அன்மொழித்தொகை. காரணனுரையெனும் ஆரணமொழியென்பது-வேதம் ஒருவராற்கூறப்பட்டதன்று அநாதிநித்தியமென்னும் பாட்ட பிரபாகர மதங்களின் மறுதலையாய்நின்றது. பிரபாகரம் - பாட்டமதத்தின் பிரிவென்க. ஓகாரம் மூன்றும் வினா. ஆதியென்புழி அகரச்சுட்டும் ஓதினென்புழி முறையே இழிவும் உயர்வுமாகிய உம்மைகளும் தொக்கன. எவரால் எந்நகர் விளக்கமுற்றதோ அவரை அந்நகர்த்தலைவரென்றல் ஆன்றோர் வழக்காகலின் வாதவூரண்ணலென்றார். [1]"கொச்சைக்கிறைவன் சிவஞானசம்பந்தன்" என்பதனுமறிக. (தொடரும்)

1. வியஞ்சகம்-விளக்கும்பொருள்.

1. தேவாரம் திருக்ஷேத்திரக்கோவை - கக.

# அறநிலையச் சட்டம்

# MADRAS ACT.

"The translation has not been authorised or accepted as authentic by the Government." Translation by Sri A. S. GNANASAMBANDAM Translation Dept.

—:O:—

(முன் தொடர்ச்சி)

**93. சட்ட நடவடிக்கைகளுக்குப் பிடித்த நீதிமன்றச் செலவு முதலிய செலவுகளை வசூலிப்பது.**— யாதொரு அறநிலையம் பற்றிய ஒரு சட்ட நடவடிக்கைக்கு ஒரு கட்சிக்காரர் என்னும் முறைமையில் அல்லது அந்த நடவடிக்கை சம்பந்தமாக 102-வது பிரிவின் (1) உட்பிரிவில் அடங்கியுள்ளதெதற்கும் பாதகமில்லாமலே அரசாங்கத்தார், ஆணையர், ஒரு துணை ஆணையர், ஒரு பிராந்தியக் குழுவினர் அல்லது ஓர் உதவி ஆணையருக்குப் பிடித்த சகல செலவுகளும், கட்டணங்களும், பட்டுபடிகளும் அந்த நிலையத்தின் நிதிகளிலிருந்து செலுத்தப்படத்தக்கவையாகும்; ஆனால், அதைச் செலுத்துவதற்கான பொறுப்பு தனிப்பட்ட முறைமையில் ஒரு கட்சிக்காரர் மீது அல்லது வேறொரு நபர் மீது ஏற்பட்டிருந்து, செலவான பணத்தை இப் பிரிவின்படி ஈடுசெய்யப் பெறுவதற்கான உரிமை வெளிப்படையான சொற்களால் மறுதலிக்கப்பட்டிருக்கிற விஷயங்களில், ஷெ செலவுகள் முதலியவை அந்த நிதிகளிலிருந்து அவ்வாறு செலுத்தப்படத்தக்கவையாகமாட்டா.

**94. சகாயத் தொகைகள், செலவுகள், கட்டணங்கள், பட்டுபடிகள், ஆகியவற்றை வசூலிப்பது.**—(1) 92-வது, 93-வது பிரிவுகளின்படிச் செலுத்தப்படத்தக்க சகாயத் தொகைகள், செலவுகள், கட்டணங்கள், பட்டுபடிகள் ஆகியவற்றை சம்பந்தப்பட்ட அறநிலையத்தின் தர்மகர்த்தருக்கு நிர்ணயிக்கப்பட்ட மாதிரியாய் விதிக்கப்படவேண்டியதுமல்லாமல் அவருக்கு நோட்டிஸ் அனுப்பப்படவும் வேண்டும்.

ஆனால், யாதொரு காரணத்தினால் ஷெ சகாயத் தொகை செலவுகள், கட்டணங்கள், பட்டுபடிகள் கணக்கிடப்படாமல் விட்டுவிடப்பட்டிருந்தால் ஆணையர் நிர்ணயிக்கப்பட்ட கால அளவுக்குள் சந்தர்ப்பத்துக்கேற்பப் பாக்கியாயுள்ள சகாயத் தொகை செலவுகள், கட்டணங்கள் அல்லது பட்டுபடிகளின் பகுதியை விதித்து நோட்டிஸ் ஒன்றை தர்மகர்த்தரிடம் சேர்ப்பிப்பதுமன்றி அத்தகைய நோட்டிஸ் அவரிடம் சேர்ப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து 15 தினங்களுக்குள் தொகையைச் செலுத்துமாறு கேட்கவும் செய்யலாம். இந்தச் சட்டத்தில் கண்டுள்ள ஷரத்துக்களும் அதன் கீழ்ச் செய்யப்பட்டுள்ள விதிகளும் சாத்தியமான வரையில் இப்படி விதித்து வாங்குவது முதல் தடவையிலேயே செய்யப்பட்டாற்போல பயன்படும்.

(2) (a) ஷெ தர்மகர்த்தர் (1) உட்பிரிவின்படிக்கான அல்லது அதன் விலக்கு நிபந்தனையின்படிக்கான அந்த நோட்டிஸைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து பதினைந்து தினங்களுக்குள்ளாவது அதற்குமேலே ஆணையரால் கொடுக்கப்படக் கூடிய காலத்துக்குள்ளாவது, அதைத் தாம் எவ்விதமாகவேனும் ஆட்சேபிப்பதாயிருந்தால் அந்த ஆட்சேபனையை எழுத்து மூலமாக ஆணையருக்குச் செய்துகொள்ளலாம். ஷெ ஆட்சேபனையானது, ஷெ தொகையைச் செலுத்த அவருக்குள்ள பொறுப்புக்காவது ஷெ நோட்டிஸில் குறிப்பிட்டிருக்கும் தொகைக்காவது சம்மந்தப்படலாம். ஆணையர், ஷெ ஆட்சேபனையைப்பற்றி ஆலோசித்து, தமது பிரதம நோட்டிஸை உறுதி செய்தோ, ரத்து செய்தோ, மாற்றியமைத்தோ தமது தீர்ப்பைக் கொடுக்கவேண்டும்.

(b) தொகைகளை விதிப்பதற்கான நோட்டிஸ் வந்து சேர்ந்த தேதியிலிருந்து ஒரு மாதத்துக்குள்ளாவது, ஆட்சேபனை செய்து கொள்ளப்பட்டிருந்தால் ஆணையருடைய தீர்ப்பின் தேதியிலிருந்து ஒரு மாதத்துக்குள்ளாவது, அதற்கு மேற்பட்டு அவர் கொடுக்கக்கூடிய காலத்திற்குள்ளாவது ஷை தர்மகர்த்தர் (1) உட்பிரிவின்படிக்கான அல்லது அதன் விலக்கு நிபந்தனையின்படிக்கான பிரதம நோட்டிஸில் குறிப்பிட்டிருக்கும் தொகையையேனும், ஆட்சேபனையின் பேரில் ஆணையரால் நிச்சயிக்கப்பட்ட தொகையையேனும் செலுத்த வேண்டும்.

(3) தர்மகர்த்தர், அனுமதிக்கப்பட்ட காலத்திற்குள் மேற்சொன்ன தொகையைச் செலுத்தத் தவறிப்போய்விட்டால், அந்த அற நிலையத்தின் யாதொரு சொத்து இருக்கும் மாவட்டத்தின் கலெக்டரானவர், நிர்ணயிக்கப்பட்ட விதமாக ஆணையர் தம்மைக் கேட்டுக் கொள்வதன்பேரிலும் இப் பிரிவின் நிபந்தனைகளுக்குட்பட்டும், ஷை தொகை நிலவரி பாக்கியா யிருந்தால் எப்படியோ அப்படியே அதை வசூலிக்க வேண்டும்.

(4) (a) உட்பிரிவின்படி யாதொரு வேண்டுகோள் வரப்பெற்றுக் கொள்வதன் மேல், கலெக்டரானவர் சம்பந்தப்பட்ட தர்மகர்த்தருக்கு ஒரு நோட்டீஸ் கொடுத்து—

(i) அந்த நோட்டிஸ் சேர்ப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து பதினைந்து தினங்களுக்குள்ளாக, வேண்டுகோளில் கண்டு நோட்டிஸில் குறிக்கப்பட்டிருக்கும் தொகையைச் செலுத்தும்படி அவருக்கு உத்தரவு செய்ய வேண்டும்; மேலும்,

(ii) அவர் அப்படிச் செலுத்தத் தவறினுல் ஷை தொகை நிலவரி பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படியே அது வசூலிக்கப்படுமென்று தெரிவிக்கவேண்டும்.

(b) மேற்சொன்ன பதினைந்து தினக் கால அளவுக்குள் கேட்கப்பட்ட தொகை செலுத்தப்படாவிட்டால், கலெக்டரானவர் ஷை நோட்டிஸில் குறிப்பிட்டிருக்கும் தொகை நிலவரி பாக்கியா யிருந்தால் எப்படியோ அப்படியே (அதை வசூலிப்பதற்கான செலவுகள் சகிதமாக) வசூலிக்கத் தொடங்க வேண்டும்.

(5). (3) உட்பிரிவின்படிச் செய்து கொள்ளப்படும் வேண்டுகோள் ஒன்று வரப்பெற்றுக் கொள்வதன்மேல், கலெக்டரானவர் அதில் கண்ட தொகையை, சம்பந்தப்பட்ட அற நிலையத்துக்கு அரசாங்கத்தாரால் கொடுக்கப்படத்தக்கதாயுள்ள தஸ்தீக் அல்லது வேறு யாதொரு வர்த்தனையிலிருந்து பிடித்துக்கொள்ளவேண்டும்; ஆனுல், ஷை தஸ்தீக்காவது இதர வர்த்தனையாவது இது காரியத்துக்குப் போதுமானதாயிராவிட்டால், கலெக்டரானவர் கிடைக்கக்கூடிய தஸ்தீக் அல்லது இதர வர்த்தனையை அல்லது தொகையை நிறுத்தி வைத்துக்கொண்டு, மீதித் தொகை நிலவரி பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படியே அதை வசூலிக்க வேண்டும்.

(6) கோயில்கள், குளங்கள், உற்சவங்கள் நடைபெறும் இடங்கள் ஆகிய இவை உட்பட வழிபாடு செய்யும் இடங்களும், விக்கிரகங்களும், வாகனங்களும், ஆபரணங்களும், ஷை அற நிலயத்தின் ஆசாரப்படி வழிபாடு செய்யும் காரியங்களுக்காகவாவது சடங்கு சம்பந்தமான ஊர்வலங்களுக்காகவாவது அவசியமாயிருக்கக்கூடிய ஷை நிலயத்தின் பாத்திரங்கள் முதலிய இதர வஸ்துக்களும் (3), (4), (5) உட்பிரிவுகளை அனுசரித்து நடவடிக்கை நடத்தப்பெறுவதற்கு உள்ளாகமாட்டா.

(7) வரி வசூலிப்பைக் குறித்த 1864-ம் ஆண்டு சென்னபட்டணத்துச் சட்டத்தில் (சென்னை 1864-ம் ஆண்டு 2-வது சட்டம்) கண்ட நிபந்தனைகளின்படி பிரஸ்தாப சொத்தை ஜப்தி செய்த பிறகு அதை விற்பதற்குப் பதிலாக, ஆணையர் கேட்டுக்கொள்வதின்பேரில் கலெக்டரானவர் ஷை சொத்தையாவது அதில் அவசியமாயிருக்கக்கூடிய பாகத்தையாவது சுவாதீனப்படுத்திக் கொண்டு, வசூலிக்க உத்தேசிக்கும் தொகையைப் வரப்பெற்றுகிற வரையில் அதன் வருமானத்தை வசூலிக்க ரிஸீவர் ஒருவரை நியமிக்கலாம். ஷை ரிஸீவருக்கு பிரதிபலன் ஏதாகிலும் கொடுக்கப்பட்டால் அதுவும் அவருக்குப் பிடித்த இதர செலவுகளையும் சம்பந்தப்பட்ட நிலயத்தின் வருமானத்திலிருந்து செலுத்தப்படவேண்டும்.

(8) இப்பிரிவை அனுசரித்து நல்லஎண்ணத்துடன் செய்யப்பட்ட அல்லது செய்ய

உத்தேசிக்கப்பட்ட யாதொரு காரியத்துக்காக அரசாங்கத்தார் மேலாவது அரசாங்கத்தைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தர் அல்லது ஊழியர் மேலாவது வழக்கு பிராது அல்லது சட்டப்படிக்கான வேறே நடவடிக்கை எதுவும் எந்த நீதி மன்றத்திலும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

95. சில விஷயங்களில் சகாயத் தொகை விதிக்கக்கூடாதென்பது:—சகாயத்தொகைகளை விதிப்பதற்காக 94-வது பிரிவின்படி நோட்டீஸ் கொடுக்கப்படுகிற பசலிக்கு அடுத்து முந்திய மூன்று பசலிகளுக்கு மேற்பட்ட காலத்துக்கு யாதொரு சகாயத் தொகையை விதிக்க ஆணையர் தகுதியுடையவராக மாட்டார்.

## அத்தியாயம் X

### கட்டளைகளின் நிர்வாக நிதி

96. மத-தருமக் கட்டளைகளின் நிர்வாக நிதி.-(1)இந்து மத அறக் கட்டளைகள் நிர்வாக நிதி என்று பெயர் கொண்ட நிதி ஒன்று நிறுவப்படவேண்டும். ஷை நிதியானது ஆணையரிடம் நிலைபெறும்.

(2). 1951-ம் ஆண்டு இந்துமத தருமக் கட்டளைகள் சட்டத்தின் (சென்னை 1951-ம் ஆண்டு 19-வது சட்டம்) 101-வது பிரிவின் கீழ் அரசாங்கத்தாரிடத்தில் நிலைபெற்றுள்ள ஆஸ்திகளும் அரசாங்கத்தாரால் ஆணையருக்கு மாற்றப்படக்கூடிய தொகைகளும், மேற்படி சட்டத்தின்படி அரசாங்கத்தாருக்குச் சேரவேண்டிய தொகைகளும், 92-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்கீழ்ச் செலுத்தப்படத்தக்க இதர தொகைகளும் வசூலிக்கப்படும்போது மேற்படி நிதியில் பற்று வைக்கப்படவேண்டும். அரசாங்கத்தாரிடமிருந்து மானியங்களையும் அல்லது கடன்களையும் யாதொரு தனிப்பட்ட நபரிடமிருந்து மானியங்களையும் மேற்படி நிதியின் கணக்கில் ஆணையர் ஏற்றுக்கொள்வதானது சட்ட சம்மதமாகும். ஆணையர் 92-வது பிரிவைச்சேர்ந்த (4) உட்பிரிவின் கீழும் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்ட தொகைகளையும் அரசாங்கத்தாரிடமிருந்து பெற்றுக் கொள்ளப்பட்ட கடன் தொகைகளையும் அரசாங்கத்தாருக்கு மேற்படி நிதியிலிருந்து திருப்பிக்கொடுக்க வேண்டும்.

97. இந்து மத அறக் கட்டளைகள் பொது நல நிதியை ஏற்படுத்துவது.—(1) தேவையுள்ள கோயில்களையும், அவைகளின் கட்டிடங்களையும், சித்திரங்களையும் புதுப்பிப்பதற்காகவும் அவைகளைப் பாதுகாப்பதற்காகவும் எல்லா வகைப்பட்ட அல்லது யாதொருவகையைச் சேர்ந்த அற நிலையங்களுக்குப் பொதுவாக உள்ள கொள்கைகளைப் பிரசாரம் செய்வதற்காகவும், அறநிலையங்கள் தங்களுடைய உபரி நிதிகளிலிருந்து தாமாகவே முன்வந்து கொடுக்கும் சகாயத் தொகைகளைக்கொண்டு மத தரும கட்டளைகள் செய்து பொதுநல நிதி என்று அழைக்கப்படும் நிதி ஒன்றை ஆணையர் ஏற்படுத்துவது சட்ட சம்மதமாகும்.

(2) மேற்படி நிதி நிர்ணயிக்கப்படக்கூடிய விதத்தில் ஆணையரிடத்தில் நிலைபெறுவதுமன்றி அவரால் அவ்வாறு நிர்வகிக்கப்படவும் வேண்டும்.

## அத்தியாயம் XI.

### பலவகைப்பட்டவை

98. அரசாங்க உத்தியோகஸ்தர்கள் சில தஸ்தவேஜுகளுக்கு நகல்களையாவது அவைகளிலிருந்து எடுக்கப்பட்ட பாகங்களையாவது(எக்ஸ்ட்ராக்டுகளையாவது) கொடுக்கவேண்டுமென்பது.- சட்டத்தின் பிரயோகத்தைக் கொண்டுள்ள யாதொரு சட்டம் அல்லது விதியில் என்ன சொல்லியிருந்தபோதிலும் பாதகமில்லாமலே, யாதொரு அற நிலையத்துக்காவது, அதன் யாதொரு அசையும் பொருளுக்காவது அசையாப் பொருளுக்காவது சம்பந்தப்பட்ட யாதொரு ரெகார்டு, ரெஜிஸ்டர், ரிபோர்ட் அல்லது இதர தஸ்தவேஜைத் தங்கள் பொறுப்பில் வைத்திருக்கிற சகல அரசாங்க உத்தியோகஸ்தர்களும், ஆணையர், துணை ஆணையர் யாதொரு பிராந்தியக் குழு அல்லது உதவி ஆணையர் கோரக்கூடிய மேற்படி ரெகார்டு முதலியவைகளுக்கு அல்லது அவைகளிலிருந்து வேண்டியிருக்கக்கூடிய பாகங்களுக்கு நகல்களையேனும் எக்ஸ்ட்ராக்டுகளையேனும் அவர்களுக்குக் கொடுக்கவேண்டும்.

99. பார்வையிட அதிகாரம்.—ஆணையர் துணை ஆணையர் அல்லது ஓர் உதவி ஆணையர், நிர்ணயிக்கப்படக்கூடிய நிபந்தனைகளுக்கும் வரையறைகளுக்கும் உட்பட்டு, அற

நிலையம் ஒன்றின் சம்பந்தமான யாதொரு ரெகார்டு, ரெஜிஸ்டர் அல்லது இதர தஸ்த வேஜை அல்லது அத்தகைய நிலையத்தின் யாதொரு அசையா, அசையும் பொருளை, யாதொரு அரசாங்க அலுவலகத்தில் நியாய 'மான எல்லாக் காலங்களிலும் பார்வையிடுவ தற்கு உரிமையுள்ளவராவார்.

*100.* **அற நிலையத்தின் நன்மைக்காக உயில் மூலமான ஆஸ்தி.**—(*1*) யாதொரு உயி லின்கீழ் ஒரு அற நிலையத்தின் பெயருக்கு ஆஸ்தி ஒன்று எழுதிவைக்கப்பட்டிருந்தால் அல்லது அத்தகைய ஆஸ்தியே அற நிலையம் ஒன்றை ஏற்படுத்தியிருந்தால் அதன் நகல் ஒன்றை அந்த உயிலானது பதிவு செய்யப் பட்டிருக்கக்கூடிய அல்லது பதிவு செய்யப் பட கோரப்படுகிற சம்பந்தப்பட்ட டிவிஷ னின் துணை அல்லது உதவி ஆணையருக்கு அனுப்புவது எக்ஸிக்யூட்டரது கடமை யாகும்.

(*2*) (*1*) உட்பிரிவின்கீழ் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளபடி துணை அல்லது உதவி ஆணையருக்கு அத்தகைய உயிலின் நகல் ஒன்று அனுப்பப்பட்டிருக்கிறது என்று யாதொரு கோர்ட்டாருக்கு சந்தேகமறத் தெரிந்தாலன்றி மற்றப்படி அவர்கள் அத் தகைய யாதொரு உயில் அல்லது அட்மி னிஸ்ட்ரேஷன்லெட்டர் என்னும் அதிகாரப் பத்திரமும் அதனுடன் இணைக்கப்பட்ட அத்தகைய உயில் இவைகளை கொடுக்கக் கூடாது.

*101.* **தர்மகர்த்தருக்கு அல்லது நிர்வாக அலுவலருக்குச் சுவாதீனப்படுத்துவது.**— யாதொரு நபர்,—

(a) ஒரு அற நிலையத்தின் தர்மகர்த்த ராக அல்லது நிர்வாக உத்தியோகஸ்தராக, அல்லது

(b) *1951*-ம் ஆண்டு செப்டம்பர்மீ *30*-ம் தேதிக்கு முன் சபையாரால் தயாரிக் கப்பட்ட யாதொரு ஏற்பாட்டில் மானேஜ ராக நியமிக்கப்பட்டிருந்து அந்த நபர் பிரஸ் தாப அற நிலையத்தையாவது, அதன் ரெகார் டுகளையும், கணக்குகளையும், சொத்துக்களையு மாவது தர்ம ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள முடியாதபடி, அந்த அற நிலையத்தைச் சேர்ந் தவராய், தமது உத்தியோகத்திலிருந்து தள்ளிவிடப்பட்டிருக்கும் அல்லது சிறிது காலம் நீக்கி வைக்கப்பட்டிருக்கும் அல்லது அப்படிச் சுவாதீனத்தில் வைத்திருக்க மற் றப்படி பாத்தியதையற்றவரா யிருக்கும் யாதொரு தர்மகர்த்தர், உத்தியோகஸ்தர் அல்லது ஊழியரேனும், ஷை தர்மகர்த்தர் உத்தியோகஸ்தர் அல்லது ஊழியக்காரரிட மிருந்து பாத்தியதை கொண்டாடுபவராய் அல்லது அடைந்தவராய், தன் நிமித்தமாக வாயினும் ஷை தர்மகர்த்தர், உத்திகோகஸ் தர் அல்லது ஊழியரில்லாத ஒருவர் நிமித்த மாகவாயினும் சுவாதீனத்தில் வைத்திருப்ப தாக நல்ல எண்ணத்துடன் பாத்தியதை கொண்டாடுபவரல்லாத வேறே யாதொருவ ராயினும் எதிர்க்கப்பட்டாலும் அல்லது தடுக்கப்பட்டாலும், ஷை நிலையம் அல்லது சொத்து யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு மாகாண மாஜிஸ்ட்ரேட் அல்லது முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டானவர் மேலே கண்டபடி நியமிக்கப்பட்ட நபர் விண்ணப் பஞ் செய்துக் கொள்வதன் பேரிலும், நிய மன உத்தரவை ஆஜர் படுத்துவதன் பேரி லும், ஷை விண்ணப்பம், சொத்தினைச் சுவா தீனப்படுத்திக் கொள்வதற்காகவானல், பிர ஸ்தாப சொத்து ஷை அற நிலையத்துக்குச் சொந்தமானதென்று கண்டு நிர்ணயிக்கப் படும் விதமாக ஆணையர் கொடுக்கும் ஒரு உறுதிமொழிப் பத்திரம் ஆஜர்ப்படுத்தப்படு வதன் மேலும், சந்தர்ப்பத்துக்கேற்றப்படி, ஷை அற நிலையத்தையாகிலும் அதன் ரெக் கார்டுகளையும் கணக்குகளையும் சொத்துக் களையுமாகிலும் மேற்சொன்னபடி நியமிக் கப்பட்ட நபரிடம் ஒப்புவிக்கும்படிக் கட் டளையிடலாம்.

ஆனல், எந்த சொத்து விஷயமாகவும் அப்படிப்பட்ட உறுதிமொழிப் பத்திரத் தைக் கொடுப்பதற்கு முன்னல், ஷை ஆணை யர் உறுதிமொழிப் பத்திரத்தைக் கொடுப்ப தற்கான தமது உத்தேசத்தைப்பற்றி சந்தர்ப் பத்துக்கேற்றபடி, ஷை அற நிலையத்தின் தர்மகர்த்தர், உத்தியோகஸ்தர் அல்லது ஊழியக்காரருக்கு நோட்டிஸ் கொடுக்க வேண்டும்; மேலும், ஷை தர்மகர்த்தர், உத்தி யோகஸ்தர் அல்லது ஊழியக்காரர் எழுப் பும் எவையேனும் ஆட்சேபனைகளை ஆலோ சிக்கவும் வேண்டும்.

மேலும், இப் பிரிவின்படிக்கான நடவடிக்கைகளின் காரியத்துக்காக மேற்சொன்ன உறுதி மொழிப் பத்திரமானது எந்தச் சொத்துகளுக்கு அது சம்பந்தப்படுகிறதோ அந்தச் சொத்துக்கள் ஷை அற நிலையத்தைச் சேர்ந்தவை என்பதற்கு முடிவான சான்ருகும்.

அன்றியும் இப் பிரிவின்படிக்கான ஓர் உத்தரவினுல் துன்பமடைந்த ஒருவர் ஷை சொத்து விஷயமாக தமக்குள்ள பாத்தியதையை ஸ்தாபிப்பதற்காக ஒரு வழக்குத் தொடங்குவதற்கு இப் பிரிவில் கண்டதெதனுலும் தடையேற்படமாட்டாது.

**விளக்கம்.**—34-வது அல்லது 41-வது பிரிவின் ஷரத்துகளுக்கு விரோதமாகச் செய்யப்பட்ட யாதொரு பராதீனத்தின்படி பாத்தியதை கொண்டாடும் ஒருவர் இப் பிரிவின் தாற்பரியப்படி நல்ல எண்ணத்துடன் பாத்தியதை கொண்டாடுபவராகக் கருதப்படமாட்டார்.

(2) (1) உட்பிரிவில் கூறப்பட்டுள்ள மாகாண நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதிபதி செர்டிபிகேட்டில் ஆணையரால் கூறப்பட்டுள்ள சொத்துக்களின் சுவாதீனத்திற்காக நியமிக்கப்பட்ட நபருக்கு ஒப்படை செய்ய கட்டளையிடும் விண்ணப்பம் பைசலாகாமலிருக்கும்போதே, ஷை சொத்துக்களின் அல்லது அவசியமா யிருக்கக்கூடிய அத்தகைய ஒரு பகுதியின் சுவாதீனத்தைப் பெற்றுக் கொள்வதற்காக ஒரு ரிசீவரை நியமிக்கலாம். ரிசீவருக்கு ஊதியம் ஏதேனும் கொடுக்கப்பட்டிருந்தால் அவ்வூதியமும், அவருக்கு ஏற்பட்ட இதர செலவுகளும் சம்பந்தப்பட்ட அற நிலையத்தின் வருமானத்திலிருந்து கொடுக்கப்படவேண்டும்.

**102. நடவடிக்கைகள் முதலியவைகளுக்குப் பிடிக்கும் செலவு.**—(1) இச் சட்டத்தின்படி நீதிமன்றத்தாருக்குச் செய்து கொள்ளப்படும் யாதொரு வழக்கு, அப்பீல் அல்லது விண்ணப்பத்துக்காகவும் அது சம்பந்தமாகவும் பிடிக்கும் நீதி மன்றச் செலவுகள் விஷயமாகவும் கட்டணங்கள் விஷயமாகவும் இதர செலவுகள் விஷயமாகவும் நீதி மன்றத்தார் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிறபடி உத்தரவு செய்ய வேண்டும்; அந்த நீதிமன்றத்தார் 93-வது பிரிவில் கண்ட ஷரத்துகளுக்குட்பட்டு ஷை நீதிமன்றச் செலவுகள், கட்டணங்கள், இதர செலவுகள் ஆகிய இவை முழுவதுமாயினும் அவைகளில் எவ்வளவு பாகமாயினும் சம்பந்தப்பட்ட அற நிலையத்தின் அல்லது கட்டளையின் சொத்து அல்லது வரும்படியிலிருந்து கொடுக்கப்பட வேண்டுமென்ருவது, தங்களுக்குத் தகுதியாகத் தோற்றும் மாதிரியாயும் நபர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்றும் செலுத்தப்பட வேண்டுமென்ருவது கட்டளையிடலாம்.

(2) ஆணையருக்கு முன் அல்லது ஒரு துணை ஆணையருக்கு முன் நடக்கும் யாதொரு அப்பீல், விண்ணப்பம் அல்லது இதர நடவடிக்கைக்காகவும் அது சம்பந்தமாகவும் பிடிக்கிற செலவுகள், கட்டணங்கள் பட்டுபடிகளைக் குறித்து ஆணையர் அல்லது துணை ஆணையர் தமக்கு யுக்தமாகத் தோற்றுகிற உத்தரவைப் பிறப்பிக்க வேண்டும்; மேற்படி செலவுகளையும் கட்டணங்களையும் பட்டுபடிகளையும் எவர்கள் அல்லது எந்த நிதியிலிருந்து எவ்வளவு மட்டில் செலுத்தவேண்டுமென்னும் விஷயத்தை நிச்சயிக்க அவருக்குப் பூரண அதிகாரமுண்டு; மேலும், இது விஷயமாய்ப் பிறப்பிக்கப்படும் உத்தரவை நிறைவேற்றும் பொருட்டு நீதிமன்றத்துக்கு ட்ரான்ஸ்பர் செய்யலாம்; நீதிமன்றத்தார் அந்த உத்தரவு நியாயமானதென்று கருதினுலும் அவ்வாறு கருதுகிற அளவுக்கும் அந் நீதி மன்றத்தார் அந்த உத்தரவு தங்களாலேயே பிறக்கப்பட்டிருந்தால் எப்படியோ அப்படியே அதை நிறைவேற்ற வேண்டும்.

**103. தர்மகர்த்தர் அனுமதியின்றி தொகை கடன் கொடுக்கவோ கூடாதென்பது.**—எந்த தர்மகர்த்தரும் நிர்ணயிக்கக் கூடிய அதிகாரியின் அனுமதியின்றியும் நிர்ணயிக்கப்படக் கூடிய நிபந்தனைகளுக்கும் உட்பட்டும் தாம் எந்த அற நிலையத்தின் தர்மகர்த்தராயிருக்கிருரோ அந்த அறநிலையத்தின் காரியத்துக்காக அல்லது அதன் சார்பாகத் தொகைகளைக் கடன் கொடுக்கவோ கடன் வாங்கவோ கூடாது.

**விளக்கம்.**—இப் பிரிவின் காரியங்களுக்காக தர்மகர்த்தர் என்பதில் அற நிலையம் ஒன்றின் நிர்வாகம் நிலை பெற்றுள்ள நிர்வாக அலுவலர் அல்லது இதர நபர் என்பதும் அடங்கும்.

*104.* **ஷெட்யூலினல் நிர்ணயிக்கப்பட்டபடி நீதிமன்ற கட்டணங்களைச் செலுத்தவேண்டு மென்பது.**—கோர்ட் கட்டணங்களையும் வழக்கின் மதிப்பீடுகளையும் குறித்த 1955-ம் ஆண்டுச் சட்டத்தில் (சென்னை 1955-ம் ஆண்டு 14-வது சட்டம்) என்ன சொல்லியிருந்தபோதிலும், பாதகமில்லாமலே ஷெட்யூலின் (1), (2) பத்திகளில் விவரிக்கப்பட்டிருக்கும் தஸ்தாவேஜுகளுக்கு அதன் (3) பத்தியில் கண்டிருக்கும் கட்டணங்கள் சரியான கட்டணங்களாகும்.

*105.* **நிவாரணை.**-இச் சட்டத்தில் கண்டதெதனுலும்—

(a) இச் சட்டத்திலாவது இதன் படிச் செய்யப்பட்ட விதிகளிலாவது வேறே விதமாய் வெளிப்படையாய் கண்டிருக்கிற படிக்கன்றி மற்றப்படி, யாதொரு அறநிலையமானது ஆசார மூலமாகவோ மற்றப்படியோ ஒருவர் பெறப் பாத்தியதை உள்ள யாதொரு மரியாதை, ஊதியம் அல்லது மேலாதாயமேனும், வேறு யாதொரு விஷயத்தைப்பற்றி அதன் ஊர்ஜ்ஜிதமான மாமூலேனும் பாதிக்கப்படமாட்டாது; அல்லது

(b) மத போதனை செய்வது அல்லது பாரமார்த்திகத் தொண்டு புரிவது ஆகிய இவைகளுக்குச் சம்பந்தப்பட்ட அலுவல்கள் உட்பட, ஒரு மடத்தின் தலைவருடைய மத சம்பந்தமானவையும் பாரமார்த்திகத்துக் குரியவையுமான அலுவல்களில் எவரேனும் யாதொரு விதமாய் தலையிடுவதற்கு அனுமதி ஏற்படமாட்டாது.

*106.* **பிரசாதம் அல்லது தீர்த்தம் வினியோகிப்பதில் உள்ள வேற்றுமைகளை அகற்றுவது.**—இச் சட்டத்தில் அல்லது இந்து சட்டத்தின் யாதொரு பகுதி, விதி அல்லது அர்த்தம் அந்தச் சட்டத்தின் பாகமாக உள்ள யாதொரு ஆசாரம் அல்லது பழக்கம் அல்லது இதர யாதொரு சட்டம் அல்லது கோர்ட்டாரின் யாதொரு டிகிரி இவைகளில் என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே, யாதொரு அறநிலையத்தில் யாதொரு பிரசாதம் அல்லது தீர்த்தம் வினியோகிப்பதில் ஜாதி, பால், பிறப்பிடம் அல்லது இவைகளில் யாதொன்றின் காரணமாக வேறுபாடு இருக்கக்கூடாது.

**விளக்கம்.**—இப் பிரிவிலே,—

(a) "பிரசாதம்" என்பது, சாதம், அல்லது இதர ஆகாரம், யாதொரு பழம், மலர், இலை. விபூதி, குங்குமம், துளசி, வில்வம், மஞ்சள், சந்தனம் என்று பொருள்படும். மேலும், அதில் அரசாங்கத்தார் விளம்பரம் பிரசுரித்து அதன் மூலமாகக் குறிப்பிடக் கூடிய இதர பொருள்களும் அடங்கும்.

(b). "தீர்த்தம்" என்பது புனிதமான நீர், வெல்லத் தண்ணீர் அல்லது பால் என்று பொருள்படும்; மேலும், அதில் அரசாங்கத்தார் விளம்பரம் பிரசுரித்து குறிப்பிடக் கூடிய இதர திரவப் பொருள்களும் அடங்கும்.

*107.* **அரசியலமைப்பின் 26-வது பிரிவின் படிக்கான உரிமைகளைச் சட்டம் பாதிக்காதென்பது.**—அரசியலமைப்பின் 106-வது பிரிவிலும், 25-வது பிரிவைச் சேர்ந்த (2) பகுதியிலும் ஏற்பாடு செய்திருக்கிறபடிக்கன்றி மற்றபடி இச் சட்டத்தில் கண்டதெதுவும் அரசியலமைப்பின் 26-வது பிரிவின்படி எம் மதத்தினருக்கேனும் அதன் ஒரு பிரிவினருக்கேனும் வழங்கப்பட்ட உரிமைகளுக்கு விரோதமாக எந்த அதிகாரத்தையும் வழங்குவதாகவோ எக் கடமையேனும் விதிப்பதாகவோ கருதப்படமாட்டாது.

*108.* **அறநிலையங்களின் பரிபாலனம் நிர்வாகம் முதலியவைகளின் விஷயமாய், வழக்குகளுக்குத் தடை.**—யாதொரு அறநிலையத்தின் பரிபாலனம் அல்லது நிர்வாகம் சம்பந்தமாகவாவது, வேறு எந்த விஷயம் அல்லது தகராறை நிச்சயிப்பதற்காக அல்லது தீர்ப்பதற்காக இச்சட்டத்தில் நிபந்தனை கண்டிக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு விஷயம் சம்பந்தமாகவாவது, இச் சட்டத்தில் கண்ட நிபந்தனைகளின்படியும் அவைகளையனுசரித்தும் அன்றி மற்றபடி எந்த நீதி மன்றத்திலேனும் யாதொரு வழக்கையோ இதர சட்ட நடவடிக்கையோ தொடரக் கூடாது.

*109.* **1951-ம் ஆண்டு செப்டம்பர் 30-ம் தேதிக்குப் பிறகு அறநிலையங்களின் சொத்து காலவரையறைச் சட்டத்தின்கீழ் நிலைபெறக்கூடாதென்பது.**—1951-ம் ஆண்டு செப்டம்பர் 30-ம் தேதிக்கு முன்பு ஒரு நபரிடம் அல்லது அதே உரிமை அவருக்கு முன்பு பெற்றிருந்த

வரிடம் நிலை பெற்றிருந்திராததும் மத ஸ்தாபனத்தைச் சேர்ந்ததுமான சொத்து அல்லது நிதிகளை பிரஸ்தாப காலத்தில் அமுலிலிருக்கிற எந்தக் காலவரையறைச் சட்டத்தில் கண்டுள்ளதெதுவும்ஷெ நபரிடம் நிலைபெறச் செய்வதாகக் கருதப்படமாட்டாது.

**110. V-வது, VI-வது அத்தியாயங்களின்படி நடக்கிற விசாரணைகளில் நடவடிக்கை முறையும், அதிகாரங்களும்.**—ஆணையராவது, துணை ஆணையராவது V-வது அத்தியாயத்தின்படியாகிலும், VI-வது அத்தியாயத்தின்படியாகிலும் ஒரு விசாரணை நடத்தினாலும், ஓர் அப்பீலை விசாரித்தாலும், சந்தர்ப்பத்திற்கேற்றபடி, வழக்குகளைப் பரிசீலனை செய்வதற்கேனும், அப்பீல்களை விசாரிப்பதற்கேனும் (1908-ம் ஆண்டு 5-வது மத்தியச் சட்டம்) பயன்படத்தக்க நடவடிக்கை முறையைக் கூடிய வரையில் அனுசரித்து மேற்படி விசாரணையை நடத்தவும், அப்பீலை விசாரிக்கவும் வேண்டும்.

(2). 1872-ம் ஆண்டு இந்து தேசத்து சாட்சியச் சட்டத்திலும் (1872-ம் ஆண்டு 1-வது மத்திய சட்டம்), பிரமாணங்களைக் குறித்த 1873-ம் ஆண்டு இந்து தேசத்துச் சட்டத்திலும் (1873-ம் ஆண்டு 10-வது மத்திய சட்டம்) கண்ட நிபந்தனைகள் மேற்படி விசாரணைகளுக்கும் அப்பீல்களுக்கும் பயன்படும்.

(3) அப்படிப்பட்ட ஒரு விசாரணையை நடத்தும் அல்லது அப்படிப்பட்ட ஓர் அப்பீலை விசாரணை செய்யும் ஆணையராவது யாதொரு துணை ஆணையராவது நியாய உத்தியோகஸ்தர்களைப் பாதுகாப்பதைக் குறித்த 1850-ம் ஆண்டுச் சட்டத்தின் (1850-ம் ஆண்டு 18-வது மத்தியச் சட்டம்) தாற்பரியப்படி நீதி விவகார முறையில் பிரவர்த்திக்கும் நபராயிருப்பதாகக் கருதப்படுவார்.

**111. இச்சட்டத்தின்படி பிறப்பிக்கப்பட்ட விளம்பரங்கள், உத்தரவுகள் முதலியவைகளை நீதி மன்றத்தில் ஆட்சேபிக்கக் கூடாதென்பது.**—இச் சட்டத்திலே வேறேவிதமாய் வெளிப்படையாக நிபந்தனை கண்டிருந்தாலன்றி மற்றப்படி, அரசாங்கத்தாராவது ஆணையராவது யாதொரு துணை ஆணையராவது யாதொரு பிராந்தியக் குழுவாவது யாதொரு உதவி ஆணையராவது இந்தச் சட்டத்தின் ஷரத்துக்களின்படி பிறப்பித்த எந்த விளம்பரமும், கொடுத்த எந்த சர்டிபிகேட்டும், செய்த எந்த உத்தரவும், கொண்டு வந்த எந்தத்தீர்மானமும், எடுத்துக்கொண்ட எந்த நடவடிக்கைகளும் அல்லது காரியமும் நிச்சயித்த எந்த ஏற்பாடும், செய்த வேறு எந்தக் காரியமும் எந்த நீதிமன்றத்திலேனும் ஆட்சேபிக்கப்படுவதற்கு உள்ளாக மாட்டா.

**112. தணிக்கை அறிக்கை முதலியவற்றை உதவி ஆணையர் மூலமாகப் பிராந்தியக் குழுவுக்கு அனுப்பவேண்டுமென்பது.**—யாதொரு தணிக்கை அறிக்கை, கணக்குகள், விவரக் கணக்குகள், ரிப்போர்ட்டுகள் அல்லது இதர தஸ்தாவேஜுகளையும், ஒரு பிராந்தியக் குழு அதிகாரங்களைச் செலுத்துகிற கடமைகளை நிறைவேற்றுகிற ஒரு நிலையம் சம்பந்தமாக அந்தக் குழுவிற்கு அனுப்ப வேண்டியிருக்கிற அல்லது அதனுல் கேட்கப்படுகிற யாதொரு தகவலையும், ஒரு பிராந்தியக் குழுவுக்காக வென்று உத்தேசிக்கப்பட்ட சகல கடிதப்போக்குவரத்துகளையும் சம்பந்தப்பட்ட உதவி ஆணையருக்கு அனுப்ப வேண்டும்; அவர் அவற்றைக் குறித்த தமது அபிப்பிராயக் குறிப்புகள் அல்லது சிபாரிசுகள் எவையேனுமிருந்தால் அவை சகிதமாக மேற்படி குழுவினரின் அடுத்த சபையில் அவர்களுக்கு முன் வைக்க வேண்டும்.

**113. நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்திலே பிராந்தியக் குழுவுக்குப் பதிலாக செயலாற்ற உதவி ஆணையருக்குள்ள அதிகாரம்.**—சாதாரணமாக பிரஸ்தாபக் கமிட்டியால் செய்யப்படவேண்டிய யாதொரு காரியத்தை யாதொரு அறநிலையத்தின் நன்மையை முன்னிட்டு உடனே செய்வது அவசியமென்று உதவி ஆணையர் அபிப்பிராயப்பட்டால், அவர் நெருக்கடியான சந்தர்ப்பங்களில் அல்லது பிராந்தியக் குழு, இச்சட்டத்தின்படிக்கான கடமைகளை நிறைவேற்றவும் அலுவல்களைச் செய்யவும் தவறிவிட்டது அல்லது விட்டுவிட்டது என அவர் சந்தேகமறத் தெரிந்துகொண்டால் அப்படிப்பட்ட காரியம் செய்யப்படவேண்டுமென்று கட்டளையிடலாம்.

ஆனுல் உதவி ஆணையரால் எடுத்துக் கொள்ளப்பட்ட யாதொரு நடவடிக்கை அல்லது பிறப்பிக்கப்பட்ட யாதொரு கட்

டளை, இச் சட்டத்தின் யாதொரு ஷ்ரத்துக்கும் பொருத்தமற்றதாக இருக்கக்கூடாது.

மேலும், உதவி ஆணையர் அப் பிரிவின் படி எடுத்த நடவடிக்கைகளையும், பிறப்பித்த கட்டளையும், அவற்றிற்கான காரணங்களையும் ஆணையருக்கு ரிப்போர்ட் செய்ய வேண்டும்.

**114.** **ரெக்கார்டுகளை வரவழைக்கவும், உத்தரவு பிறப்பிக்கவும் அரசாங்கத்தாருக்குள்ள அதிகாரம்**—(1) எந்த நடவடிக்கை விஷயமாய் ஒரு நீதிமன்றத்துக்கு வழக்கு அல்லது அப்பீல் அல்லது விண்ணப்பம் செய்து கொள்ள இச் சட்டத்தில் ஏற்பாடு செய்திருக்கிறதோ அந்த நடவடிக்கை அல்லாத ஒரு நடவடிக்கை கிரமமானதா என்பதைப் பற்றியாவது அதில் பிறப்பிக்கப்பட்ட யாதொரு தீர்ப்பு அல்லது உத்தரவு சரியாயிருக்கிறதா,சட்ட ரீதியாயிருக்கிறதா அல்லது நியாயமாயிருக்கிறதா என்பதைப் பற்றியாவது தாங்கள் சந்தேகமறத் தெரிந்து கொள்ளும்பொருட்டு அரசாங்கத்தார் அந்த நடவடிக்கை விஷயமாய் ஆணையர் அல்லது யாதொரு துணை அல்லது உதவி ஆணையர் யாதொரு பிராந்தியக்குழு அல்லது யாதொரு தர்மகர்த்தரின் ரெகார்டை வரவழைத்துப் பரிசிலனை செய்யலாம்; அத்தகைய ஒரு தீர்ப்பு அல்லது உத்தரவு மாற்றப்பட வேண்டும், ரத்துச் செய்யப்பட வேண்டும், நேர்விரோதமாக மாற்றப்பட வேண்டும் அல்லது புனராலோசனைக்கு அனுப்பப்பட வேண்டும் என்று எந்த விஷயத்திலாவது அரசாங்கத்தாருக்குத் தோற்றினால், அவர்கள் அவ்வாறே உத்தரவு பிறப்பிக்கலாம்.

ஆனால், கட்சிக்காரர் ஒருவர், தமது முறையீடுகளைச் செய்துகொள்ள அவருக்கு நியாயமான வாய்ப்பு ஏற்பட்டிருந்தாலன்றி, அவருக்குப் பிரதிகூலமாக எந்த உத்தரவையும் அரசாங்கத்தார் பிறப்பிக்கலாகாது.

(2) அரசாங்கத்தார் அத்தகைய ஒரு தீர்ப்பு அல்லது உத்தரவு விஷயமாய் (1) உட்பிரின்படித் தங்களுடைய அதிகாரங்களைச் செலுத்துகிறவரையில் அது நிறைவேற்றப்படுவதை நிறுத்திவைக்கலாகாது.

(3) யாதொரு விஷயம் சம்பந்தமாக இப் பிரிவின்கீழ் அரசாங்கத்தாரைத் தங்களது அதிகாரத்தைப் பயன்படுத்துமாறு கோரிக் கொடுத்துக் கொள்ளப்படும் எந்த விண்ணப்பமும், **21**-வது பிரிவின்கீழ் அதே விஷயமாக ஆணையருக்கு ஒரு விண்ணப்பமும் கொடுத்துக் கொள்ளப்பட்டிருந்து அவர் அதைப் பைசல் செய்திருந்தாலன்றி மற்றபடிக் கொடுத்துக் கொள்ளப்படக் கூடாது.

(4) இப் பிரிவின்கீழ் அரசாங்கத்தாருக்கு அவர்களது அதிகாரத்தைப் பயன்படுத்துமாறு கோரிச் செய்துகொள்ளப்படும் ஒவ்வொரு விண்ணப்பமும் அந்த விண்ணப்பத்திற்குச் சம்பந்தப்படுகிற உத்தரவு அல்லது நடவடிக்கை விண்ணப்பத்தாருக்குச் சேர்ப்பிக்கபட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் கொடுத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**115.** **வரையறை.**—இச் சட்டத்தின் கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட யாதொரு உத்தரவு அல்லது டிக்ரிக்கு எதிராக யாதொரு நடவடிக்கை, வழக்கு, அப்பீல் அல்லது புனர் விசாரணை மனு ஒன்றைக் கொடுத்துக் கொள்ள இச் சட்டத்தின்கீழ் நிர்ணயிக்கப் பட்டுள்ள வரையறைக் கால அளவைக் கணக்கிடுகையில், அத்தகைய உத்தர்வு அல்லது டிக்ரியின் உறுதி கூறப்பட்ட நகல் ஒன்றை பெற்றுக் கொள்வதற்கு அவசியமான கால அளவு நீக்கி விடப்பட வேண்டும்.

**விளக்கம்.**—இப் பிரிவின் காரியங்களுக்காக உத்தரவு என்பதில், அவ்வுத்தரவைச் சேர்ந்த யாதொரு இணைப்பும் அடங்கும்.

**116.** **விதிகள் செய்ய அதிகாரம்.**—(1) அரசாங்கத்தார் இந்தச் சட்டத்தில் கண்ட காரியங்களை நிறைவேற்றுவதற்காக விதிகள் செய்யலாம்.

(2) முக்கியமாகவும் முந்திய அதிகாரத்தின் பொதுத் தன்மைக்குப் பாதகமில்லாமலும், அடியிற்கண்ட விஷயங்களுக்காக விதிகள் செய்ய அவர்களுக்கு அதிகாரம் உண்டு:—

(i) நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று இந்தச் சட்டத்தில் வெளிப்படையாய்ச் சொல்லியிருக்கிற அல்லது நிர்ணயிக்கப் படுவதற்கு இந்தச் சட்டத்தில் வெளிப்படையாய் அனுமதி கொடுத்திருக்கிற சகல விஷயங்களும்;

(தொடரும்)

உ

# தாயுமானசுவாமிகள் பாடல்

## திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வம் எந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமாய்
என்றைக்கு முள்ளதெதுமேல்
கங்குல்பக லறநின்ற எல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெல்லாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்குவாம்.

[அங்கு இங்கு என்று சொல்ல முடியாதவண்ணம் எல்லாவிடத்தும் பரந்து நிற்கும் பேரொளியாகி, அகண்ட பூரணானந்தமாகி, தனது திருமேனியாகிய பேரருளோடு நிறைந்துள்ளது எப்பொருள்? தனது அருளாகிய வெளியினிடத்தே அனந்தங்கோடி அண்டபுவனங்கள் முற்றும் தங்குமாறு இச்சையை வைத்து உயிர்களுக்குள் உணர்வாகி விரிந்துள்ளது எப்பொருள்? மனத்தால் நினைத்தற்கும், வாக்கால் உரைத்தற்கும் இயையாவண்ணம் அதீதமாய் நின்றது எப்பொருள்? பல்வேறு சமயங்களும் தமது தெய்வம் எமது தெய்வம் என்று எவ்விடத்தும் விடாதுபற்றி எதிர்த்து வாதித்திடுமாறும், அவ்வச் சமயங்கள்தோறும் அவரவர்க் கடவுளராய் வீற்றிருப்பது எப்பொருள்? இவ்வாறு யாண்டும் அறுதி பெருமையாயுள்ள வழக்காகி, எவ்வகைத் தொழிலினும் வல்லதாய் ஒப்பற்ற சித்துருவாகி, பேரின்பவடிவாகி எக்காலத்தும் நித்தியமா யிருக்கின்றது எப்பொருள்? இரவும் பகலும் இல்லையாக நின்றதொரு நிலைக்களத்தேதானேயா யுள்ளது எப்பொருள்? அந்த மெய்ப்பொருளே யாவர் கருத்துக்கும் ஒப்ப முடிந்தது. அதுவே நாம் காணத் தக்கபொருள் அனைத்துமாகும். அம்மெய்ப்பொருளை மௌன ரூபமான வெளியீடாக நினைத்து, கைகூப்பி வணக்குவோம்.]

## அடியவர் திருநட்சத்திரங்கள்

### பிலவ—வைகாசி

#### சைவம்

7உ—நமிநந்தியடிகள்
8உ—சேரமாசிமாறநாயனார்
19உ—திருஞானசம்பந்தசுவாமிகள்
,, திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்
,, முருகநாயனார்
,, திருநீலநக்கநாயனார்
28உ—கழஞ்சிங்கநாயனார்

#### வைணவம்

16உ—நம்மாழ்வார்



திருப்போரூர்—மலைக்கோயில்



திருப்போரூர் முருகன் கோயில் முன்மண்டபம்

Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Administration) Department, Madras-6.
Printed at Paari Achakam, 127, Broadway Madras-1.